University of Madras.

# B. A. EXAMINATION OF [illegible]

## SILAPPADHIKARAM.

---

### *PUKARKANDAM.*

---

## 10. NADUKANKATHAI

நாடுகாண்காதை

WITH

HE COMMENTARY

OF

ADIARKKUNALLAR

*Edited with Notes*

BY


**V. SAMINATHA AIYER,**

*TAMIL PANDIT, GOVERNMENT COLLT KUMBAKONUM.*

Madras:
PRINTED AT THE MEMORIAL PRESS.
1894.
Price per copy [illegible]

# முகவுரை.

"சந்தநயம் பொதிபந் தடவரைச் செந்தமிழ்ப்
பாமா சாரியன பதங்கள்
கிரமேம் கொள்ளுதுந் திகழ்ந்தற பொருட்டே."

தமிழ்ப்பாஷையிலுள்ள பழைய காப்பியமைந்தனுள் ஒன்றாகிய சிலப்பதிகாரமென்பது சேரமுனியாகிய இளங்கோவடிகளால் இயற்றப்பட்டது; களவியற்பொருள்கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலிய உரையாசிரியர்களால் எடுத்துக்காட்டப்படும் பிரமாண நூல்களுளொன்று; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்துள்ளது; எவ்வெப்பொருளைச் சொல்லினும் அவ்வப்பொருளை நேரிற் கண்டாற்போல மனத்திற்குத் தோற்றுமவண்ணம் நன்குபுலப்படுத்துந் தெள்ளிய இனிய நன்னடையுடையது; கணவனும் மனைவியுமாகிய கோவலன் கண்ணகி என்பவருடைய சரித்திரத்தை விரித்துக்கூறுவது; தமிழ்நாட்டரசர் மூவருடைய இராஜதானிகளாகிய புகார் (=காவிரிப்பூம்பட்டினம்) மதுரை வஞ்சியென்னும் மூன்றன பெருமைகளையும் விளக்குவது; பண்டைக்காலத்திருந்த பலவகை மாந்தருடைய

ஒழுக்கமுத லியவற்றை இககாலததார எளிதில
தெரிநதுகொள்ளுதற்குச்
பந்த கருவியாகவுளளது; அரசர் நீதியிற்
சிறிதுபிழைப்பினும்
வரை அறககட ர கூற்றுயனின்று
கொல்லுமென்பதும், கற்புடைமகளிரை யககளேயன்றித்
தேவரும் முனிவருந் துதித் தல இயல்பென பது ம்,
இருவினையும் செய்தமுறையே செய் தோனை நாடிவநது
தம்பயனை நுகர்விககுமெனபதுமாகிய இம்மூன் றினையும்
இவ்வுலகத்தாாக்குத தெரிவித்தற்பொருட்டே
இளங்கோவடிகளாற் செய்யப்பட்டது; மேற்கூறிய
மூன் றுபகுதியையும் சிலம்புகாரணமாகத்தெரிவித்தலின்,
இந்நூல் சிலப்பதிகாரமென்னும் பெயர்பெறறது.
இன்னும இந்நூல், முத்தமிழும்
விரவப்பெற்றதாதலின்
இயலிசைநாடகப்பொருட்டொடர்நிலைச்செய்யுளென்றும்,
நா
டகவுறுப்புக்களை உடைத்தாதலின்
நாடகக்காப்பியமென்றும்,
உரைப்பாட்டும இசைப்பாட்டும் இடையிடையே
விரவப்
உ முகவுரை.
றதாதலின் உரையிடையிட்டபாட்டுடைச்செய்யுளென்றும்
பெ
யர்பெறும்.
இக்கதைநடந்தகாலமும் இளங்கோவடிகள் காலமும்
ஒன்
றென்றும் இது முதலில் தமிழிலேதான்
அவராற்செய்யப்பட்ட
தென்றும் இந்நூற்பதிகச்செய்யுளாலும்,

வாரந்தருகாதையாலும்
விளங்குகின்றமையின், இச்சரித்திரம்
வேறுபாஷையிலிருந்து
வந்ததென்று சொல்வதற்கிடமில்லை.

இச்சிலப்பதிகாரம், இளங்கோவடிகளால்
தான் செய்யப்பட்ட
தற்குக்காரணமும் கதைச்சுருக்கமுமமைந்துள்ள
பதிகச்செய்
யுளை முதலிற்பெற்று, மங்கலவாழ்த்துப்பாடல் முதலிய
பத்து
றுப்புக்களையுடைய புகார்க்காண்டமும்,
காடுகாண்காதை முதலிய
பதின்மூன்றுறுப்புக்களையுடைய மதுரைக்காண்டமும், குன்றக்குர
வை முதலிய ஏழுறுப்புக்களையுடைய வஞ்சிக்காண்டமுமாகப் பகு
க்கப்பட்டுள்ளது. இதில் இயற்றமிழ்ப் பாகுபாடான வெண்
பா அகவற்பா கலிப்பா என்பனவைகளும், இசைத்தமிழின்
பாகு
பாடான ஆற்றுவரி முதலியபாக்களும, நாடகத்தமிழின்
பாகுபாடான உரைப்பாட்டுக்களும் வந்துள்ளன. இவற்றுள்
மிகுதியாகவுள்ளது அகவற்பாவே.
/

இந்நூற்கு
அரும்பதவுரையென்றும், அடியார்க்குநல்லருரையென்றும்
இரண்டுரைகளுள்ளன. அவற்றுள், அடியார்க்கு
நல்லாருரையிலுள்ள சிலகுறிப்புக்களால் அரும்பதவுரை
முந்தியதென்று தெரிகிறது. இப்பழைய
அரும்பதவுரையிலுள்ள சிலகுறிப்புக்களால் அவ்வுரைக்கு
முன்பே இந்நூற்குப் பழைய

வுரையொன்றிருந்ததாகவுங்கெ... அவ்வுரை இக்காலத்திற் கப்படவில்லை. இந்நூலிற் சிலசில இடங்களில் அரும்பதவுரையாசிரியர்கொண்டபாடம் வேறாகவும், அடியார்க்குநல்லார்கொண்ட[redacted]ம் வேறாகவுமுள்ளன. அவை அவ்வவ்விடத்துள்ள உரைவேறுபாடுகளால் நன்குபுலப்படும்.

அரும்பதவுரை, ஆங்காங்குள்ள கிரிசொற்களின் பொருளை மட்டுமே ஒருவாறுபுலப்படுத்திச் சிற்சிலவிடத்து மேற்கோள்களையுடையதாய் மிகச்சுருக்கமாக இந்நூல்முழுமைக்கும் எழுதப்பட்டுள்ளது. அவ்வுரையாசிரியர்பெயரும் அவரிருந்தவிடமும் அவர்காலமுதலியனவும் ஒருவாற்றானுந்தெரிந்துகொள்ளக் கூடவில்லை.

## ரூ கவுரை. க.

அடியார்க்குநல்லாருரை, அவ்வரும்பதவுரையைப் பெரும்பாலுந்தழுவியும், சிறுபான்மை மறுத்தும், சிலவிடத்துப் பதவுரையாயும், சிலவிடத்துப்பொழிப்புரையாயு மெழுதப்பட்டு, ஆங்காங்குச் சொல்லாயும் பொருணயங்களை இனிதுபுலப்படுத்தி உரியவிடங்களில் இயற்றமிழ்ப்பகுதியாகிய ஐந்திலக்கணங்களையும், இசைத்தமிழ் நாடகத்தமிழ்களின் பகுதிகளையும் பலநூல்

அடியார்க்குநல்லாருரையில் சிலவிடத்திருந்த
கடினமான சொற்களைமாற்றி அவ்வவ்விடத்தில்
வேறுசொற்களை யமைத்தும், ஒருவாற்றானும்
விளங்காதனவும் இடக்கர்ப்பொருளையுடையனவுமாகிய
சிலவற்றை நீக்கியும், மாணாக்கர்களுக்கு விள
ங்குதற்பொருட்டு நூதனமாக எழுதப்பட்ட
குறிப்புக்களைச் சிலவிடத்து
அடியார்க்குநல்லாருரையின் பின்னர்ச்சேர்த்திருப்



## முகவுரை.

பதாதலின் உரையிடையிட்டபாட்டுடைச்செய்யுளென்னும் பெ
யர்பெறும்.

இக்கதைநடந்தகாலமும் இளங்கோவடிகள் காலமும் ஒன்
றென்றும் இது முதலில் தமிழிலேதான்
அவராற்செய்யப்பட்ட
தென்றும் இந்நூற்பதிகச்செய்யுளா லும்,
வரந்தருகாதையாலும்
விளங்குகின்றமையின், இச்சரித்திரம்
வேறுபாஷையிலிருந்து
வந்ததென்று சொல்வதற்கிடமில்லை.

இச்சிலப்பதிகாரம், இளங்கோவடிகளால் தாம்
செய்யப்பட்ட
தற்குக்காரணமும் கதைச்சுருக்கமுமமைந்துள்ள
பதிகச்செய்
யுளை முதலிற்பெற்று, மங்கலவாழ்த்துப்பாடல்முதலிய
பத்து
றுப்புக்களையுடைய புகார்க்காண்டமும்,
மதுரைக்காண்டமுதலிய

கிரிசொற்களின் பொருளை, மட்டுமே ஒருவாறுபுலப்படுத்திச் சிறசிலவிடத்து மேற்கோள்களையுடையதாய் மிகச்சுருக்கமாக இந்நூல்முழுமைக்கும் எழுதப்பட்டுள்ளது. அவ்வுரையாசிரியர்பெயரும் அவரிருந்தவிடமும் அவர்காலமுதலியனவும் ஒருவாற்றானுந்தெரிந்துகொள்ளக்கூடவில்லை.

## நூகவுரை.



அடியார்க்குநல்லாருரை, அவ்வரும்பதவுரையைப் பெரும்பாலுந்தழுவியும், சிறுபான்மை மறுத்தும், சிலவிடத்துப் பதவுரையாயும், சிலவிடத்துப்பொழிப்புரையாயு மெழுதப்பட்டு, ஆங்காங்குச் சொன்னயம் பொருணயங்களை இனிதுபுலப்படுத்தி உரியவிடங்களில் இயற்றமிழ்ப்பகுதியாகிய ஐந்திலக்கணங்களையும், இசைத்தமிழ் நாடகத்தமிழ்ப் பகுதிகளையும் பலநூல்மேற்கோண் முகமாக நன்குவிளக்கும் விசேடவுரையோடுகூடி இயன்றமட்டில் ஒவ்வொன்றையும் நன்குதெரிவித்து மிகவிரிவாக அமைந்துள்ளது. இவ்வுரையாசிரியரிடமும்

குறிப்புக்களைச் சிலவிடத்து அடியார்க்குநல்லாருரையின் பின்னர்ச்சேர்த்திருப்பூ முகவுரை.
பதன்றிப் பழைய அரும்பதவுரையில் வேண்டியபாகங்களையும் அவ்வவ்விடங்களில் அவற்றின் பின்னே சேர்த்தும் பதிப்பித்திருக்கிறேன்.

இங்ஙனம், உத்தமதானபுரம் வே. சாமிநாதன்.

சிலப்பதிகாரநூலாசிரியராகிய

# இளங்கோவடிகள் வரலாறு.

இந்நூலாசிரியராகிய இளங்கோவடிகள் சேரநாட்டில் வஞ்சிநகரத்திருந்து அரசுசெய்த சேரலாதனென்னும் அரசனுடைய புத்திரர்; சேரன் செங்குட்டுவனுடைய தம்பி; இதனால் இவர் முதலில் இளங்கோவென்று சொல்லப்பட்டுப் பின்பு துறவுபூண்டமையால் இளங்கோவடிகளென்று பெயர்பெற்றார்; இவர் துறவுபூண்டதற்குக்காரணம் சிலப்பதிகாரப்புத்தகத்தின் கo-ம் பக்கம் உகூ-ம் வரி முதலியவற்றாலும், இவர் இந்நூல்செய்ததற்குக்காரணம் இந்நூற்பதிகத்தின் முதற்பாகத்தாலும் விளங்கவுணரப்படும்; துறவு பூண்டபின்பே இந்நூல் இவராற்செய்யப்பட்டது. பத்தினியைத் துதித்தலையுட்கொண்டும் இக்கதைமுகமாகச் சிலதருமங்களை உலகத்தார்க்குத்தெரிவிக்கவேண்டுமென்பதையெண்ணியும் இவர் இந்நூலைச்செய்தனர்; இவர் தமதுமரபிலுள்ளாருடைய உயர்ச்சியைக்கூறுதலபோலவே ஏனைச்சோழபாண்டியர்களுடைய உயர்வுகளையும் சிறிதும் வேறுபாடின்றி நன்றாகச் சொல்லியிருத்தலால், இவருடைய துறவின்றூய்மை நன்குபுலப்படு கின்றது. இந்நூலின் இடையிடையே சொல்லப்படுபவர்களுடைய

சரித்தி ரங்கழ்ச்சியாற்போந்த நற்பயனையும் தீப்பயனையும் ஆங்காங்கு உலகத்தாரைநோக்கிச் சொல்லிப்போதல் இவர்க்கியல்பு. பின்னும் யாரேனும் மிக்க துன்ப மநுபவித்ததாகச் சொல்லும்பொழுது அத்துன்பத்திற்குக்காரண மாக முற்பிறப்பில் அவர்கள் தீவினைசெய்ததைக்குறித்தும் நல்வினைசெய்யாமையைக்குறித்தும் அப்பொழுதப்பொழுது இவர்மனம் இரங்கிற்றென்பதைப் ஆங்காங்குள்ள பாடல்கள் புலப்படுத்தும். இவர் மலைநாட்டினராதலால் இந்நூலில் அந்நாட்டுச்சொற்கள்பல அவ்வவ்விடத்திற் காணப்படும்.

இவர்காலமும் சிலப்பதிகாரக் கதைநிகழ்ந்தகாலமும் ஒன்றாதலாற் காவிரிப்பூம்பட்டினத்திலும் மதுரையிலும் நடந்த சரித்திரங்களை அறிந்தோர்வாய்க்கேட்டும் மலைநாட்டிநிகழ்ந்ததைத் தாம் நேரிற்கண்டும் இந் நூலைச்செய்தனர். இங்ஙனம்செய்தாரென்பதை இந் நூற்பதிகத்தாலும், உரு-வது காட்சிக்காதையாலும், ௩0-வது வரந்தருகாதையாலும், விளங்க வுணர்க.

இக் கதையோடு தொடர்புள்ளதாகிய மணிமேகலையின் கதையையும் இந்நூலினிறுதியிற்சேர்த்துப் பாடக்கருதியிருந்த இவர், அக்கதையை மணிமேகலைப்பெயரால் ஒரு காப்பியமாக யான் செய்துமுடித்தேனென்று மதுரைத்தமிழாசிரியர் கூலவாணிகன் சாத்தனார் சொல்லக்கேட்டு அவ்



வாறு செய்யாதுவிடுத்தனர். இதனைச் சிலப்பதிகாரத்தின் கரு-ம் பக்கம் ரு-ம் வரிமுதலியவற்றிற்காண்க.

**சமயம்.**—உகு-வது கால்கோட்காதையிற் செங்குட்டுவன் இமயஞ் செல்லப் புறப்பட்டபொழுது [அடி ருச-ருள] "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி,யுலகுபொதி யுருவத் துயர்ந்தோ ன்

சேவடி, மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந், திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு" எனவும், பின்பு [அடி கூஉ-கூஎ] "ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன், சேடங்கொண்டு சிலர்நின் றேத்தத், தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள், வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின், ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத், தாங்கின னாகி" எனவும், செங்குட்டுவனைநோக்கி, இமயத்தினின்றும் வந்த முனிவர்கள் கூறியதாக [அடி கூஅ-கூகூ] "செஞ்சடை வானவ னருளினில் விளங்க, வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்" எனவும், வரந்தரு காதையில் மாடலன்கூறியதாக [அடி கருக-கருஉ] "ஆனே றூர்ந்தோ னருளிற்றோன்றி, மாநிலம் விளக்கிய மன்னவ னாதலின்" எனவும் இவரே கூறி யிருத்தலாலும், இவர் அவனுடைய தம்பியாதலாலும் இவரது சமயம் சைவமென்று தோற்றுகின்றது. இவருக்கு அடிகளென்று பெயர் வந்திருத்தலைக்கொண்டும், பதிகத்தில் "குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த" என்பதிற் கோட்டமென்றதற்கு 'அருகன்கோயில்' என்று அடியார்க்குநல்லார் பொருள்செய்திருத்தலைக்கொண்டும், இந்நூலிற் பலவிடத்துஞ் சைனமதக்கொள்கையை இவர் சிறப்பித்துச் சொல்லியிருத்தலைக்கொண்டும் இவ ரதுசமயம் சைனமென்று கூறுவாருமுளர்.

காலம்.—"உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு, ளுரைசா லடிக ளருள மதுரைக் கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்" என இந்நூற்பதிகத் திறுதியிலும் "இளங்கோ வேந்த னருளிக் கேட்ப, வளங்கெழு கூல வாணிகன் சாத்தன், மாவண் டமிழ்த்திற மணிமே கலைதுற, வாறைம் பாட்டினு ளறிய வைத்தனன்" என மணிமேகலையினுடைய பதிகத்திறுதியிலும் கூறியிருத்தலால், இளங்கோவடிகளும் சாத்தனாரும் ஒருவர் முன்னொருவர் முறையே சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் இயற்றினாரென்று போதருதலாலும், தொல்காப்பியப்பொருளதிகாரச் செய்யுளியலில், "ருகா ரை முதலா" என்னும் சூத்திரத்தின் விசேடவுரையில் "சீத்தலைச்சாத்தனா ராற்செய்யப்பட்ட மணிமேகலை" என உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியரெழுதியிருத்தலால்

மேற்கூறியசாத்தனார் கடைச்சங்கப்புலவருளொருவராகிய சீத்தலைச்சாத்தனாரென்று தெரிதலானும், இளங்கோவடிகள் காலம் கடைச்சங்கப்புலவர் காலமென்று நிச்சயிக்கப்படுகிறது. அக்கடைச்சங்கப்புலவருட் சிறந்தவரும் மதுரைக்கணக்காயனார் மகனாருமாகிய **நக்கீரனார்** இறையனாரகப்பொருளுக்குத் தாம் இயற்றியவுரையில் இந்நூலிற் **கானல்வரியிலுள்ள** "நிணங்கொள்", "துறைமேய் வலம்புரி", "நோங்

௯.

தங் காதலர்", "புணர்துணை" என்னும் பாடல்களையெடுத்து உதாரணமாகக் காட்டியிருப்பதுங்காண்க.

இளங்கோவடிகளுக்குத் தமையனாகிய செங்குட்டுவன் பத்தினிக் கடவுளாகிய கண்ணகியார்க்குக் கோயில்சமைத்து விழாக்கொண்டாடியகாலத்து இலங்கையரசனாகிய கயவாகுவென்பவன் உடனிருந்தானென்று வரந்தரு காதையாலும், அக்கயவாகுவும் இலங்கையிற் கண்ணகியார்க்குக் கோயில கட்டுவித்து விழாக்கொண்டாடினனென்று இந்நூற்பதிகத்தைச்சார்ந்த உரைபெறுகட்டுரையாலுந் தெரிகின்றன. இற்றைக்குச் சற்றேறக்குறைய கஎ௬௦ - வருடங்களுக்குமுன்பு கயவாகுவெனனு மரசனொருவன் இருந்தானென்று இலங்கைச்சரித்திரத்தாற் (=மகாவம்சம்) புலப்படுகின்றது. பின்னும் சற்றேறக்குறைய எ௬௦-வருடங்களுக்கு முன்பு கயவாகுவென்னும் மற்றோரரசனிருந்ததாகவும் அச்சரித்திரத்தால் தெரியவருகின்றது. ஆயினும், இந்நூலிற் கூறிய வேறு சில அரசர்களுடைய காலத்தை ஆராயும்பொழுது இந்நூலாசிரியர்காலம் இரண்டாங்கயவாகுவின் காலத்திற்கு முந்தியதாகத் தெரிகின்றமையின், இவர்காலம், முதற்கயவாகுவின்காலமென்று துணியப்படுகிறது.

---

## சிலப்பதிகாரவுரையாசிரியராகிய

# அடியார்க்கு நல்லார் வரலாறு.

---

இவருடைய வருணம் சமயம் ஊர் காலம் ஆகிய இவற்றுள் ஒன்றும் புலப்படவில்லை; ஆனாலும் நச்சினார்க்கினியரால் மறுக்கப்படுவனவற்றுட் சில இவருடையகொள்கையாக இருத்தல்பற்றி இவரது காலம் நச்சினார்க்கினியருடைய காலத்திற்கு முந்தியிருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது. இவர், மற்றையுரையாசிரியர்கள்போலன்றித் தாம் எடுத்துக்காட்டும்மேற் கோள்களை இன்னஇன்ன நூலின்கண் உள்ளனவென்று பெரும்பாலும்புலப் படுத்தியிருக்கிறார். சிலசிலவிடத்துப் பதப்பிரயோசனமும் அலங்காரமும் மெய்ப்பாடுகளும் வேறு சில குறிப்பும் இவரால் எழுதப்பட்டுள்ளன. ஐந் திணைக்குமுரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகிய இவற் றுள் ஒவ்வொன்றின்வகை பலவற்றிற்கும் இந்த நூலிலிருந்தே உதாரணங் காட்டி விளக்கியிருக்கின்றனர். இந்நூல்செய்யப்படும்பொழுதிருந்த இசைத் தமிழ்நாடகத்தமிழ்நூல்கள் பலவும்இவர்காலத்து இறந்துபோனமையால், இவர்,அவ்விசைநாடகப்பகுதிகட்கு இசைநுணுக்கம் இந்திரகாளியம் பஞ்ச மரபு பரதசேனாபதீயம் மதிவாணர்நாடகத்தமிழ்நூல் என்னும் ஐந்துநூல் களையுமே மேற்கோளாகக்கொண்டனர். இந்நூலுள் இந்திர விழவூரெடுத்த காதையில் [அடி ௬௪] "சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென" என்



னும், கட்டுரைகாதையில் [அடி ௧௩௩ - ௧௩௫] "ஆடித் திங்கட் பேரிருட் பக்கத், 'தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று, வெள்ளி வாரத்து" என்றும் சொல்லப்பட்டுள்ள காலவரையறையைக்கொண்டும், அவ் வவ்விடத்துள்ள ஒவ் வொரு குறிப்பைக்கொண்டும், ஊகித்துக்

கோவலன் கண்ணகி இருவரும் இன்னகாலத்துக் காவிரிப்பூம்பட்டினத்திருந்து புறப்பட்டார் களென்றும் இன்ன இன்னகாலத்து இன்னது இன்னது செய்தார் களென்றும் எழுதிக்கொண்டுபோகிறார். *[உ0ரு - ௩௪ ; உ௩0 - கஉ ; ௩0எ-உ0 ; ௩0அ - உச ; ௩௩௩ - உ௩; ௩௩௪ - கக ; ௩௪௩ - ரு ] இவருடைய உரைநடை சிறசிலவிடத்தி எதுகைமோனைமுதலியவற்ருேடு கூடி இனியசுவை பயந்து செய்யுணடையாகவமைந்துள்ளது. இந்நூலுள் ஒவ்வொருபகுதிகளைத்தனித் தனியே படிப்போர்க்கு அவ்வப்பகுதிகள் ஆங்காங்குள்ளவைகளாலேயே புலப்படவேண்டுமென்பது இவர் கருத்தாதலால் முன்னெழுதியவற்றையே பின்னுமெழுதுவர். அதனை இவ்வுரையிற் பலவிடத்திங்காணலாம். இவர் கருத்து இன்னதாதலைச் சிலப்பதிகாரப்புத்தகத்தின் ௩௪உ-ம் பக்கம் ஃவதுவரிமுதலியவற்றிற்காண்க.மூலத்திலெவ்விடத்தேனும்இசைச்சொற்கள் வந்திருப்பின் அவற்றைத் தனித்தனியே எடுத்துக்காட்டி இன்னசொல்இன்னாட்டுவழக் கென்றும் , அக்காலத்துவழங்கிய பழமொழிகளின்கருத்திஎவ் விடத்தேனும் வந்திருக்குமாயின் அவற்றைத் தனித்தனியேஎடுத்துக்காட்டி இன்னது இன்னபழமொழியென்றும் புலப்படுத்துவார். ஒருதலையாகப்பொருள்கொள்ளாது பலரும் தத்தமக்குத் தோற்றியவாறேபொருள்கொள்ளக் கிடந்த போற்றியென்பதை இவர் இகரவீற்று வியங்கோளாகக்கொண்டு போற்றுவாயாகவென்று பொருள்செய்திருக்கிறார் [௩கக-கக.]; [நச்சினார்க் கினியரும் காட்டியென்பதை இகரவீற்று வியங்கோளாகக்கொண்டார்; சிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ருஅ.]. இவர், ' கானல்வரியில் விரியக் கூறுதும்' [எக-இ ; ௬உ - ரு ] என்றும, ' முன்னர் ஆணியோன் பதனுட்கூறினும்' [உ0க - க-அ.]என்றும் எழுதியிருத்தலால், இவர் கானல்வரிக்கு உரை

செய்திருக்தனரென்பதும், 'அழற்படுகாதைக்கண்ணே விரித்துக்கூறுதும்' [கஎ - உக.] என்றும், 'கட்டுரைகாதையுள் விரிபக்கூறுவாம்' [உ0கூ-கூ.] என்றும் எழுதியிருத்தலால், கட்டுரைகாதை முதலியவற்றிற்கும் இவர் உரைசெய்திருக்கவேண்டுமென்பதும் வெளியாகின்றன.

---

* இங்கே காட்டிய இவ்விரண்டெண்களுள், முன்னது சிலப்பதிகார **அச்சுப்புத்தகத்தின்** பக்கத்தையும், பின்னது அப்பக்கத்துள்ள வரியையும் **புலப்படுத்துவன.**

# சிலப்பதிகாரக்கதைச்சுருக்கம்.

## [க.—*புகார்காண்டம்.]

**சோ**ழவளநாட்டிற் காவிரிநதி கடலொடுகலக்கும் **சங்கமுகமென்**னுந்துறையையுடையதும் சோழர்களுடைய பழைய **இராசதானியாகவுள்**ளதும் பெரியோர்களாற் சிறப்பித்துப் பாராட்டிப் புகழப்படுவதுமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் சோழன்கரிகாலன் அரசாட்சிசெய்துவருகையில், இப்பர் கவிப்பர் பெருங்குடியரென்னும் மூவகைவணிகருட் பெருங்குடியர்குலத்திலுதித்தோங்கிய மாசாத்துவானென்பான், தன்மகன் கோவலனுக்கு அந்நகரில் அம்மரபிலுதித்த மாநாய்கன் மகள் கண்ணகியை மிக்க சிறப்புடன் மணம்புரிவிக்க, கோவலன் கண்ணகிபால் மிகவும் அன்புவைத்து நலம்பாராட்டி இன்புற்றுத் தருக்கி மகிழ்ந்து நடக்குநாட்களில், ஒருநாள், அக்கோவலன்றாயாகிய பெருமனைக்கிழத்தியென்பவள், கோவலனும் கண்ணகியும் இல்வாழ்க்கையை செவ்விதாகநடத்திக் கைதேர்ந்து உயர்ச்சி.

றுவிளங்குதலைக் காணவேண்டி வேறொருமாளிகையில் இல்லற
நடத்துதற்குவேண்டிப் பொருள்களிரப்பி வேலைசெய்பவர்களையும்
நியோகித்து அவ்விருவரையும் அங்கிருத்த, அவர்கள்
மனவொருமையோடு அதில் இருந்து அறவோர்க்களித்தல்
அந்தணரோம்பல் துறவோர்க்கெதிர்தல் முதலியவற்றைச்செய்து
இல்வாழ்க்கையை ஒழுங்காக நடத்திவருவாராயி னர்; இவ்வாறு
சிலவருடங்கழிந்தன.

இப்படியிருக்கையில், கோவலன், மிக்கஅழகுடையவளும்
ஆடல்பா டல் முதலியவற்றில் மிகத் தேர்ச்சிபெற்றவளுமாகிய
மாதவியென்னும் நா டகக்கணி கை யை
விரும் பித் தன்பாலுள்ள பலவகைப்பொருள்களையும் நாள் தோறுங்கொ
டுத்து அவளோடும் இடைவிடாது மருவி மகிழ்வானாயினன். கண்ணகி
யறிவாள் ஆயினும் அவ்வருத்தத்தைச் சற்றும் வெளிப்படுத்தா
மல் அவன்பாற்
சிறிதேனும் வெறுப்பின்றி இல்லறவொழுக்கத்தை வழுவா து நட
த்திவந்தாள்; அக்காலத்து வழக்கப்படி அந்நகரத்தில் இந்திரனுக்குத் தி
ருவிழா நடத்தப்பட்டது. அதன்முடிவில் அந்நகரத்தார் தத்தம் பரிவார
ங்களோடு கடலாடுதற்குச் சென்றார்கள்; கோவலனும் மாதவியுடன
கடற்க ரை யைய டைந் து ஓரிடத்தி லிருந்து
அவள் கையிலிருந்த வீணையைவாங்கிப் பலவகைப்பட்ட வரிப்பாட்டுக்களைப்
பாடிக்கொண்டு அவ்வீணையைவாசித்தான்; அவன்பாடியபாட்டுக்கள்
பலவகைப்பட்ட அகப்பொருட்சுவையைத் தழுவி யிருந்தமையின்,
மாதவி, 'இவன் வேறுமகளிர்பால் விருப்புடையன்' என்றெண்ணிப்
புலந்து அவன்கையிலுள்ள வீணையைவாங்கித் தான் வேறுகுறிப் பில்லாத
வளாகவிருப்பினும் அவன் வேறுகுறிப்புள்ளவனாகத் தனக்குத்தோற்
றினமையின், தானும் வேறுகுறிப்புடையாள்போலவே
அகப்பொருட்சுவையைத்தழுவிய பலவகைப்பட்ட வரிப்பாட்டுக்களைப்
பாடிக்கொண்டு அவ் வீணையை வா சித்தாள்;
அதனைக்கேட்டகோவலன், வேறொருவர்மேல்மனம்

---

* புகார் - காவிரிப்பூம்பட்டினம்.

வைத்து இவள்பாடினளென்றெண்ணி ஊழ்வினையின்முயற்சியால் வெறுப்புற்று அவளோடு அளவளாவாமல் தன்வீட்டையடைந்து, தேவந்தியென்னும்பார்ப்பனத்தோழியோடு சல்லாபஞ்செய்துகொண்டிருந்த கண்ணகியைக்கண்டு அவளுடன் பள்ளியறையிற்புகுந்து அவள் மேனிவாட்டத்தையும் மனவருத்தத்தையுந்தெரிந்து, 'பொய்யை மெய்யாகக்காட்டியொழுகும் பரத்தையோடுமருவி ஒழுகியகாரணத்தால முன்னோர்தேடிவைத்த பொருட்குவியல்களையெல்லாம தொலைத்து வறுமையடைந்தேனே, அஃது எனக்கு மிகவும் நாணைத்தருகின்றது' என்றுசொன்னான். கண்ணகி, மாதவிக்குக்கொடுத்தற்குப் பொருளில்லாமையால் தளர்ச்சொன்னானென்று கருதி, 'அடியேனிடத்து இரண்டு சிலம்புளவா; அவற்றைக் கைக்கொண்டருள்க' என்று சொன்னாள்; அவன், 'மதுரையையடைந்து இச்சிலம்பை வாணிகமுதலாகக்கொண்டு வியாபாரஞ்செய்து மிக்க பொருள்தேடுதற்கெண்ணினேன்; நீயும் வரல்வேண்டும்' என்றான்; அவளும் சம்மதிக்க, கோவலன் அன்றிரவின் கடையாமத்திற் கண்ணகியையழைத்துக்கொண்டு ஒருவருமறியாதபடி புறப்பட்டுக் காவிரியின் வடகரைவழியாக மேற்கேசென்று ஒரு பூஞ்சோலையையடைந்து அதில் தவஞ்செய்துகொண்டிருந்த ஆருகதசமயத் தவமுதியோளாகிய கவுந்தியைக்கண்டு வணங்கி, 'மதுரையிலுள்ள பெரியோர்கள்பால் அறநூறுகேள்விகளைக் கேட்டற்கு உடன்வருவேன்' என்று சொல்லிய அவரோடும் வழிக்கொண்டு அரங்கமடைந்து அங்குவந்த சாரணர்களைத்தரிசித்து தடமேறிக் காவிரியின் தென்கரைசேர்ந்து ஒருபொழிலிலிருந்தான்; அப்பொழுது அங்குவந்து கண்ணகியையும் கோவலனையும் அவமதித்துப்பேசிய ஒருபரத்தையையும் ஒருதூர்த்தனையும் கவுந்தி நரிவடிவங்கொள்ளும்படி சபித்து, அவர்கள் அப்பாவத்தையறிந்து இரங்கிய கோவலன்கண்ணகியர்கள்வேண்டுகோளால் அவர்களுக்கு அவ்வடிவு ஒருவருடத்தில் நீங்கும்படி சாபவிடைசெய்தாள்.

ண்டபமூரும் உறையூரையடைந்தார்கள்.

## [உ.—மதுரைக் காண்டம்.]

அடைந்தவர்கள் அன்று அங்குள்ள தங்கி மறுநாட்காலையிற்
புறப் பட்டுச் சிறிதுதூரஞ்சென்று ஓரிடத்திலிருந்து இளைப்பாறி
அங்குவந்த மறையோன் தனனால், வழிதெரிந்துகொண்டு அப்பாற்சென்றார்கள்.
செல்லும்பொழுது ஒருநாட்காலையிற் கோவலனை, கவுந்தியையும் கண்ண
கியையும் ஓரிடத்தில் வைத்துவிட்டுக்
காலைக்கடன்கழித்தற்பொருட்டு ஒருபொய்கையையடைந்து நிற்கையில்,
தன்பிரிவாற்றாதுவருந்திய மாதவியாலனுப்பப்பட்டு அவளோலையுடன்
காவிரிப்பூம்படினத்தினின்றும் அங்குவந்த கௌசிகனென்னும்
அந்தணனைக்கண்டு தன்பிரிவால் தன் தந்தை தாய் முதலியோர்களும்
மா
தவியும் படுகிறவருத்தங்களை அவனால் தெரிந்து மிக வருந்தமுற்றுத் தான்
புறப்பட்டதற்குக் காரணத்தையும் தன்வணக்கத்தையும் தன்னுடைய தந்

தைக்குச்சொல்லிப் பாதுகாத்துக்கொண்டிருக்கும்படிஅவனையனுப்பிவிட்டுக்
கவுந்தியையும் கண்ணகியையுமடைந்துஅவர்களுடன புறப்பட்டுஇடையிற்



சந்தித்த பாணர்களுடன்அளவளாவி
அவர்களால்வழியினளவுதெரிந்துகொண்டுபோய் வையை
யாற்றையடைந்து அதனைத்தொழுது புணையேறி அக்கரைசென்று
மதுரையின மதிற்புறத்ததாகிய முனிவரிருக்கையில் தங்கினான்.

மற்றைநாட்காலையெழுந்து கவுந்தியை வணங்கித் தங்களுக்கு
முன்பு நேர்ந்த துன்பங்களைச்சொல்லி வருந்திப் பின்பு
அவள்தேற்றத்தேறிக் கண்ணகியை அவள்பால்வைத்துவிட்டுத் தான்
வாணிகஞ்செய்தற்குரிய இடமறி தற்பொருட்டு மதுராநகரத்தின்
உள்ளேசென்று அதன்வளங்களையெல்லாங்கண்டு மீண்டு கவுந்
தியையடைந்து அந்நகர்ச்சிறப்பு முதலியவற்றைச்சொல்லி, பின்பு,
அங்கேவந்த தனாதி ஈட்பாளாகிய மாடலனென்னுமந்தண னோடு
சல்லாபஞ்செய்துகொண்டிருந்தான். அப்பொழுது, கவுந்தி, அங்கு

வந்த இடைச்சியர் தலைவியாகிய மாதரியைக் கண்டு அவளது நல்லொழுக்கத்தைநோக்கி, 'இவளிடத்தில் கண்ணகியை அடைக்கலமாகக்கொடுக்கலாம்' என்று நிச்சயித்து அவளையழைத்துக் கண்ணகியின் கற்புமேம்பாட்டையும் அவள்மென்மைத்தன்மையையும உயர்ந்தோர்களாற் கொடுக்கப்படும் அடைக்கலப்பொருளைப் பாதுகாத்தோர் அடைந்தபயனையும் அவட்கு விளங்கச்சொல்லிக் கண்ணகியை அவளிடம் ஒப்பிக்க, அவள் மகிழ்ச்சியுடன் ஏற்று விடைபெறாக் கண்ணகியைக் கோவலனுடனழைத்துக்கொண்டு ஆயர்பாடியைச்சூழ்ந்த தன் வீட்டையடைந்து அவ்விருவரையும் புதிய ம னையொன்றிலடைவித்து ஏவலுபசாரத்துக்குத் தன்மகள் ஐயையென்பவளைக் கண்ணகிக்குத் துணையாகவைத்துச் சமைத்தற்குரியபொருள்கள் பலவற்றையும் கொணர்ந்துகொடுக்கக் கண்ணகி அவற்றைச் செவ்விதாகச்சமைத்து முறைப்படி படைக்கக் கோவலன் இனி தாகவுண்டு கண்ணகியை அருகழைத்து அணைத்து, 'நீ இக் கற்பாலைவழியில் வந்ததையெண்ணி நம் தாய் தந்தையர் என்னென்னபடுகின்றனரோ? மிக்க செல்வத்தை அனுபவித்துக் கொண்டிருந்த நாம இக் கொடியதுன்பத்தையனுபவித்தது கனவோ? நனவாயின், இதற்குக்காரணமாக முன்பு செய்த தீவினையாதோ? யான் அறுமதியிழந்தேன்; விலைமாதொடு விடரோடுங்கூடிப் பிறரைப் புறங்கூறுங் கூட்டத்திற் சேர்ந்து நல்லொழுக்கத்தை இழந்த மகாபாவியாகிய எனக்கு இனித் தீக்கதியன்றி நற்கதியுண்டாமோ? இருமுதுகுரவர்க்கும் ஏவல் செய்தலையொழிந்தேன்; உனக்கும் துன்பஞ்செய்தேன் ;இக்கூடாவொழுக்கம் தீதென்று சிறிதும் எண்ணிலேன்' என்று பலவாறிரங்கி, 'சுற்றமுதவிய மற்றனைநீங்கி நாணமுதவிய [illegible]ற்றையும் கற்பையும் பெருந்துணையாகக்கொண்டு என்னோடுவந்து எனது தனிமையைத்தீர்த்த

"பொன்னே கொடியே புனைபூங் கோதாய், நாணின் பாவாய் நீணில விளக்கே, கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வீ" இனி, உன்னுடைய சிலம்புகளுள் ஒன்றைக்கொண்டு போய் விரைவில்விற்றுவருவேன்; வருமளவும் தனிமையால்வருந்துதலை ஒழிவாயாக' என்றுசொல்லி, ஒரு சிலம்பைவாங்கிக்கொண்டு அவள் தனியே யிருத்தலைக்கண்டு மனம்வெதும்புதலாலே பெருகிய தன் கண்ணீரை அவள் கண்டால் வருந்துவாளென்று மறைத்தவனாகி அவ்விடத்தைநீங்கிப் பிரிதற்

அ

குத் துணிவில்லாத மனமுடையவனாய்ச் சென்று எதிர்ப்பட்டோர் நிமித்தங் களை அறியாமற் கடைத்தெருவிற்புகுந்து எதிரே நூறு பொற்கொல்லர் பின்னேவர முன்வந்த ஒருபொற்கொல்லனைக்கண்டு இவன் அரசனாற் பெயர்பெற்றோனென்றெண்ணி அவனருகிற்சென்று, 'அரசன தேவியணிதற் குத் தகுதியான சிலம்பினை விலைமதிக்கும் வல்லமையுடையாயோ' என்று வினவ, அவன் மிக்கபணிவுடன் தான்வல்லனாதலைக்குறிப்பிக்கக் கோவலன் தான்கொணர்ந்த சிலம்பைக் காட்டினன். அவன்பார்த்து, 'இதனை அரசனுக்கு யான்தெரிவித்துவருமளவும் என்வீட்டிற்கு அயலதாகிய இவ்விடத்தே நீரிரும்' என்று ஓரிடத்தைக்காட்டிச் செல்லக் கோவலன் அவ்விடத்தேயிருந்தான். சென்றபொற்கொல்லன் முன்பு அரசன்மனைவியின் சிலம்புகளுள் ஒன்றை வஞ்சித்துத் திருடிக்கொண்டவனாதலால், 'யான் முன்பு வஞ்சித்துக்கவர்ந்துகொண்ட சிலம்பு எனவீட்டிலேயுள்ளதென்று இராசாவுக்கு வெளிப்படுவதற்குமுன்னமே அதனோடு ஒத்த சிலம்புக்கொணர்ந்த இப்புதியவனால் என்மீதுண்டாகும் ஐயத்தைப் போக்கலாம்' என்று தன்னுள்ளே நிச்சயித்துக் கொண்டு, தன்மனைவியின் ஊடல்தீர்த்தற்பொருட்டுத் தன்கோயிலைநீங்கி அவள்கோயிலை நோக்கிக் காமபரவசனாய்ச் செல்லும், பாண்டியன் நெடுஞ்செழியனைக்கண்டு வணங்கித் துதித்து, 'கன்னக்கோல் முதலியன இல்லாமலே கோயிற்கணிருந்த சிலம்பைத்திருடியவன் அடியேனுடைய சிறியகுடிலில் அச்சிலம்போடு வந்திருக்கிறான்' என்றுசொல்லப் பாண்டியன் உடனே

காவலாளர்களையழைத்து, 'என மனைவியின் சிலம்பு இவன்கூறிய கள்வன்கையிடத்ததாயிருப்பின், அவனைக் கொலைசெய்து அச்சிலம்போடு கொண்டுவருக' என்று சொல்லக்கருதியவன், வினைப்பயன்கூடும் காலமாதலால் மயங்கி, 'அவனைக்கொன்று அச்சிலம்பைக் கொண்டுவாரும்' என்று கட்டளையிட்டான். பொற்கொல்லன் தன் எண்ணம் பலித்ததென்று தன்னுள்ளே மகிழ்ந்து அக்காவலாளருடன் சென்று கோவலனையடைந்து அவனைநோக்கி, 'இவர்கள் அரசன்கட்டளையாற் சிலம்புகாணவந்தவர்கள்' என்றுசொல்லிக் கோவலனுடைய முகக்குறிமுதலியவற்றைக்கண்டு இவன் கள்வனல்லனென்றுசொல்லும் காவலாளர்களை இகழ்ந்துரைத்து அவனைக் கள்வனென்று வறபுறுத்திதற்குக் களவுநூலிலுள்ள ஏதுக்களையெல்லாம் அவர்களுக்கு எடுத்துக்காட்டினன்; அப்பொழுது அவர்களுள் அறிவின்மையினுற் கொலையஞ்சாதொருவன் விரைந்துசென்று கோவலனைத் தன் கைவாளால்வெட்டிவீழ்த்தினன்.

இப்பால், கண்ணகியிருந்த இடைச்சேரியில் பலவகையான உற்பாதங்களுண்டாயின; அதுகண்ட மாதரிமுதலியோரால் உற்பாதசாந்தியாகத் திருமாலைக்குறித்துக் குரவைக்கூத்து ஆடப்பட்டது; அதன்முடிவில் மாதரி நீராடுதற்பொருட்டு வையையாற்றிற்குச் சென்றாள்; அப்பொழுது சிலம்பு திருடியவனென்று துணிந்து கோவலனை அரசனேவலாளர் கொன்றசெய்தியை மதுரையிலிருந்துவந்த ஒருத்திசொல்லக்கேட்டுக் கண்ணகி பதைபதைத்து மூர்ச்சித்துப் பலவாறுபுலம்பித் தானும்அவனுடனிறத்தற்குத் துணிந்து

கூ

இடைச்சியர்மத்தியில்நின்று சூரியனைநோக்கி, 'கதிர்ச்செல்வனே! நீயறிய என்கணவர் கள்வரோ' என்றாள்; அவன், 'நின்கணவன் கள்வனல்லன்; அவனைக் கள்வனென்ற இவ்வூரை விரைவில் தீயுண்ணும்' என்று அசரீரியாகக் கூறினன். அதைக்கேட்ட கண்ணகி மிகுந்த

கோபத்தோடு தன்னிடமிருந்த மற்றொரு சிலம்புடனே புறப்பட்டுக் கண்டார்நடுங்கும்படி வீதிவழியேசென்று ஆங்குள்ள மகளிரைநோக்கிப் பலவாறு புலம்பி, 'என்கணவனை முன்போலக்கண்டு அவன்சொல்லும் நல்லுரையைக் கேட்பேன் ; அங்ஙனங் கேளேனாயின், என்னை இகழுமின்' என்று சபதஞ்செய்துகொண்டு சென்று வெட்டுண்டுகிடந்த கோவலனைச் சிலர்காட்டக்கண்டு அளவில்லாத துயரத்தையடைந்து அவனை முன்னிலைப்படுத்திப் பலவிதமாகப் பிரலாபித்து அவனுடம்பைத் தழுவிக்கொள்ள, அவ்வளவில், அவன்உயிர்பெற்றெழுந்துநின்று மதிபோன்ற முகம்வாடியதேயென்றுசொல்லிக் கையாலே அவள் கண்ணீரைமாற்ற, அவள் அவனுடைய பாதங்களை இரண்டுகையாலும் பூண்டுகொண்டு பணிந்தாள் ; உடனே அவன் நீ இங்கிருக்கவென்றுசொல்லி அவ்வுடம்பையொழித்துவிட்டுச் சுவர்க்கம்புகுதற்குத்தேவர்களோடுகூடிச்சென்றான்.' இங்ஙனமிருக்கப் பாண்டியன்நெடுஞ்செழியன்மனைவி, தீக்கனாக்கள் பலவற்றைக்கண்டுசென்று அவற்றைத் தன் கணவனோடு சொல்லிக் கொண்டிருந்தாள் ; அப்பொழுது, கண்ணகிகோபந்தணியாதவளாய் அரண்மனைவாயிலையடைந்து வாயிலோனால் தன்வரவை அரசனுக்கறிவித்து அவனனுமதிப்படி அவன்முன்சென்று, அவன் கேட்பத் தன் ஊர் பேர்முதலிய வரலாற்றையும், ஆராயாது கோவலனைக்கொல்வித்த கொடுங்கோன்மையையும் வெகுண்டுசொல்லிக் கோவலன் கள்வனல்லனென்று தெளிவித்தற்பொருட்டு, தன் சிலம்பினுள்ளேயுள்ளபரல் மாணிக்க மென்றாள் ; அவன், தன்தேவிசிலம்பின்பரல் முத்தென்று சொல்லி, கொல்லப்பட்ட கோவலனிடமிருந்துகிடைத்த சிலம்பை வருவித்துவைப்ப, கண்ணகி அதையுடைத் தாள் ; உடைக்கவே அதனின்றும் மாணிக்கப்பரல் தெறித்தது : அதுகண்டு அரசன் நடுநடுங்கி, 'இழிந்த பொற்கொல்லன் சொல்லைக்கேட்ட [illegible] கோன்மையையுடைய நானோவரசன் ! நானோவரசன் ! ! ஐயோ ! [illegible] இந்தஅருமந்தகுலமென்னாற்பழியடைந்ததே! என்ஆயுள் இன்றே அழியக்கடவது' என்றுசொல்லி மிகவுந்துக்கித்து மயங்கித் தானிருந்த ஆசனத்தில்வீழ்ந்து இறந்தான் ;

அதனையறியாத அவன்மனைவி பாதிகாத் தருளாவேண்டுமென்று கண்ணகி டாதத்தில் வீழ்ந்தாள்; வீழவே கண்ணகி, 'நான் பத்தினியாயிருத்தல் உண்மையாயின், இவ்வூரை அழித்துவிடுவேன் பார்' என்று சபதம்செய்து தனது இடக்கொங்கையை வலக்கையால்திருகியெடுத்து அதை அந்நகரத்தின்மீதெறிந்தாள்; எறியவே, அக்கினிதேவன் பார்ப்பனக்கோலத்தோடு வந்து, 'மகாபத்தினி! உனக்குப்பிழைசெய்தநாளில் இவ்வூரை எரித்துவிடும்படி முன்னமே ஓரேவல் பெற்றுளேன்; இப்பொழுது யாரையழித்தல்வேண்டும்' என்று கேட்ப, அவள், "பார்ப்பார் அறவோர் பசுப் பத்தினிப்பெண்டிர், மூத்தோர் குழவி யெனுமிவரைக் கை

கூ0

விட்டுத், தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று" சொல்ல, அப்பொழுதே அந்நகரில் அவள்சொல்லியவண்ணம் தீப்பற்றிக்கொண்டது. உடனே அந்நக ரைக்காக்கும் வருணப்பூதங்கள் நான்கும் பெயர்ந்து சென்றன; அந்நக ரத்துள்ள இடங்கள் பலவும் எரியத்தொடங்கவே அவ்வெம்மையை ஆற்றாதவ ளாகி மதுரையின் அதிதேவதை கண்ணகிபால்வந்துநின்று அவளைநோக்கி, "யான் இந்நகரின்தெய்வம்; உனக்குச் சிலவற்றைச்சொல்லவந்தேன்; அவற்றை நீகேட்பாயாக; இந்நகரத்து முன்பிருந்தபாண்டியர்களுள் ஒருவரேனும் சிறிதும் கொடுங்கோன்மையுடையாரல்லர்; இந்நெடுஞ்செழியனும் அத்தன்மையனே; ஆயினும் இதுவந்தவாற்றைச்சொல்லுகின்றேன்: முன்பு கலிங்கநாட்டிலுள்ள சிங்கபுரத்தரசனாகிய வசுவென்பவனும் கபிலபுரத்தரசனாகிய குமரனென்பவனும் தம்முட்பகைகொண்டு ஒருவரையொருவர் வெல்லக்கருதியிருந்தார்; அப்பொழுது சிங்கபுரத்துக்கடை வீதியிற் செல்வமிகுந்த பாகப் பண்டம்விற்றுக்கொண்டிருந்த சங்கமனென்னும் வணிகனை அந்நக ரத்தரசனிடம் தொழில்செய்துகொண்டிருக்கும் பரதனென்பவன் இவன் பகைவனுடைய ஒற்றனென்றுபிடித்து அரசனுக்குக்காட்டிக் கொ

மதுரையிற் கோவலன் கொலையுண்டதையும் அங்கே கண்ணகியால் நடந்தவற்றையும் மதுராநகர்த்தெய்வம் அவளுக்குமுன்வந்து சொல்லியதையும் விரித்துச்சொன்னார்; செங்குட்டுவன், பாண்டியன் இறந்ததற்கிரங்கித் தன்தேவியின் வேண்டுகோளால் கண்ணகியாகிய பத்தினிக்கடவுளைப் பிரதிஷ்டித்து வழிபடுதற்கெண்ணி, அவளுருவஞ்செய்தற்குச் சிலைகொணர்தற்பொருட்டு மந்திரிகளோடும் ஆலோசித்து, முன்னம் இமயமலையினின்றும்வந்த முனிவர்கள் 'ஆரியமன்னராகிய கனகனும் விசயனும் தமிழ்நாட்டரசரை யிகழ்ந்தார்' என்று சொல்லக்கேட்டவனாதலால், அவ்வரசர்களைவென்று அவர்கள் முடியில் அச்சிலையையேற்றிக் கொண்டுவருவேனென்று சபதம்செய்து, உடனே சேனைகளுடன் புறப்பட்டு நீலகிரியையடைந்து அங்குத்தங்கி இமயமலையினின்றும்வந்த முனிவர்கள்கூறிய ஆசியைப்பெற்று அப்பாற்சென்று கங்காநதியையடைந்து தனது நட்பரசர்களாகிய கன்னர்கள் கொணர்ந்துவைத்திருந்த ஓடமேறி அக்கரைசென்று அவ்விடத்திறங்கி அங்கே போர்செய்தற்குவந்த கனகவிசயரையும் அவருக்குத்துணையாகவந்த உத்தரன் முதலிய அரசர்களையும்வென்று தாபதவேடமுதலியவற்றைக் கொண்டோடிய அவ்வரசர்களைப்பிடித்து அகப்படுத்திக்கொண்டு தன்மந்திரியாகிய வில்லவன்கோதையையும சேனையையும் அனுப்பி இமயமலையினின்றும் சிலைவருவித்து அதைக் கனகவிசயர்முடியிலேற்றி விதிப்படி கங்கையில் நீர்ப்படை செய்து இப்பால்வந்து அதன்தென்கரையிற் சேனையோடுந்தங்கி அங்குக் கங்கையாடிவந்த மாடலனாற் கோவலன் வரலாறுமுதலியவற்றையும நெடுஞ்செழியனுக்குப்பின்பு இளங்கோவேந்தன் அரசாட்சிசெய்துவருதலையுமறிந்து அம்மாடலனுக்குத் தன் நிறையாகிய ஐம்பத்துலாம்பொன் தானஞ் செய்து தன்னால்வெல்லப்பட்ட கனகவிசயரைச் சோழனுக்கும் பாண்டியனுக்கும் காட்டிவரும்படி நீலன்முதலிய ஒற்றர்களையனுப்பிவிட்டுச் சேனையுடன்புறப்பட்டு இடையிலுள்ளவளங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு வஞ்சிநகரையடைந்து ஆங்குள்ளவர்களோடும் அளவளாவி மகிழ்வுற்றிருந்தான்; அப்படியிருக்கையில் ஒருநாள், அனுப்பப்பட்ட

நீலன்முதலிய ஒற்றர்கள் வந்து, 'தோல்வியடைந்து மாறுவேடம்பூண்டுசென்ற கனகவிசயர்முதலியோரைப் பிடித்துக்கொண்டுவந்ததைச சோழனும் பாண்டியனும் இகழ்ந்துசொன்னார்கள்' என்று சொல்லக்கேட்டு மிகுந்தகோபங்கொண்டு, அங்கு வந்திருந்த மாடலன் 'நீ கோபந்தணிக; இளமை யாக்கை செல்வமுதலியவைகள் நிலையா; நல்லபதத்தையடைவிக்கும் யாகத்தை இனிச்செய்தல் வேண்டும்' என்று பல ஏதுக்கள்மூலமாக எடுத்துச்சொல்லக்கேட்டு அக்கோபந்தணிந்து, அம்மாடலன் சொல்லியவண்ணம் யாகத்திற்குரியவற்றை அமைக்கும்படி சிலரையனுப்பி, ஆரியவரசர் முதலியோரைச் சிறையினின்று நீக்கி அவர்களுக்குவேண்டியவற்றைக்கொடுத்துஉபசரிக்கும்படி வில்லவன் கோதைக்குச்சொல்லிப் பலருடன்சென்று, சிறந்த கம்மியர்களாற்செய்யப் பட்ட ஓராலயத்தில் இமயச்சிலையாலியற்றப்பட்டுள்ள வடிவத்திற் பத்தி

கஉ

னிக்கடவுளாகிய கண்ணகியைப் பிரதிஷ்டைபண்ணி விதிப்படி நித்திய பூசைமுதலியவற்றை நடத்தும்படி கட்டளையிட்டு அங்கேயிருந்தான். அப் படியிருக்கும்பொழுது, முன்னம், கோவலன் கொலையுண்டதுமுதலியவற்றை மாடலனாற்கேட்ட தேவந்தியும் கண்ணகியின் செவிலித்தாயும் அவளடித்தோழியும் காவிரிப்பூம்பட்டினத்தினின்று நீங்கி மதுரையையடைந்து அங்கே கண்ணகியைக்காணாமல் மாதரிமகள் ஐயையைக்கண்டு அவளையழைத்துக்கொண்டு வையைக்கரைவழியேசென்று மலைநாடுபுகுந்து கண்ணகிகோயிலையடைந்து அங்கிருந்த செங்குட்டுவனைக்கண்டு தங்களை இன்னாரென்று அறிவித்துக் கண்ணகியின் பிரிவாற்றாமையால் வருந்திப் புலம்பினார்கள்; அப்பொழுது கண்ணகி தெய்வவடிவத்தோடு வெளிப்பட்டுச் செங்குட்டுவனுக்குக் காட்சிகொடுத்து வாழ்த்தினாள்; பின்பு செங்குட்டுவன் மாதவிமகளாகியமணிமேகலையின் துறவைத் தேவந்தியாற்சொல்லக்கேட்டு, அவள்மேல் ஆவேசித்த சாத்தனென்னுந்தெய்வத்தின் கட்டளையால் மாடலன் தன்கையிலுள்ள

கமண்டலநீரை அங்குவந்திருந்த மூன்று இளம்பெண்கள்மீது தெளிப்ப உடனே கண்ணகியைக்குறித்துப்புலம்பிய அம்மூவரையும் கண்ணகிதாய் கோவலன்றாய் மாதரி எனவும் இம்மூவருடைய பிறப்பினராக அறிந்து, அவர்கள் அவ்வாறு பிறந்ததற்குக் காரணத்தை மாடலன்சொல்லக்கேட்டுப் பத்தினிக்கடவுளுக்கு நித்தியபூசைசெய்யும்படி தேவந்திக்குச்சொல்லித் தான் அக்கடவுளை மூன்றுமுறை வலம் வந்து வணங்கி நின்றான்; அப்பொழுது ஆரியமன்னரும் மாளவவேந்தரும் இலங்காபுரத்தரசனாகிய கயவாகுவும் அங்குவந்து அக்கடவுளைநோக்கி 'இச்செங்குட்டுவனைப்போல எங்களுடையநாட்டில் யாங்கள் உனக்குச்செய்யும் பூசையில் நீ எழுந்தருளி எங்களுக்கு அருள்செய்யவேண்டும்' என்றுபிரார்த்திப்ப, நீங்கள்விரும்பியபடியே வரந்தந்தேனென்று அப்பொழுது ஓருரை உண்டாயிற்று. அதனைக்கேட்ட செங்குட்டுவனும் மற்றையரசர்களும் மிகுந்த சந்தோஷமடைந்தார்கள். பின்பு செங்குட்டுவன் மாடலனோடு யாகசாலைக்குச் சென்றான். அப்பால், இளங்கோவடிகள் பத்தினிக்கடவுள் கோயிலுக்குச் சென்றார்: அவருக்குமுன்பு பத்தினிக்கடவுள் தேவந்திமேல்தோன்றி அவருடைய வரலாறுகளைச் சொல்லி உவப்பித்தாள்.

கோவலன் வெட்டுண்டுவிழுந்தகாலந் தொடங்கிப் பாண்டியநாட்டில் மழை இல்லாதுபோயிற்று; வறுமையும் நோயும் அதிகரித்தன; அதுதெரிந்து கொற்கைநகரத்திருந்த அரசனாகிய இளஞ்செழியன் பத்தினிக்கடவுளுக்கு ஆயிரம் பொற்கொல்லரைப் பலியிட்டுக் களவேள்வியாற்சாந்திசெய்து விழாவெடுத்தலால், அந்நாட்டில் மிகவும் மழைபெய்தது; முற்கூறிய வறுமையும் நோயும் நீங்கின. அதனைக்கேள்வியுற்றுக் கொங்குமண்டிலத்தரசரும், இலங்காபுரத்தரசனாகிய கயவாகுவும், சோழநாட்டில் உறையூரிலிருந்த அரசனாகிய பெருநற்கிள்ளியும் கண்ணகிக்குக் கோயில்கட்டுவித்து நித்தியபூசை விழாமுதலியவற்றைச்செய்து வழிபட அவர்நாடுகள் மிகுந்த வளமுற்றன.

---

# முதலாவது புகார்காண்டம்.

## பத்தாவது

# நா டு கா ண் கா தை.

வான்கண் விழியா வைகறை யாமத்து மீன்றிகழ்
விசும்பின் வெண்மதி நீங்கக் காரிரு ணின்ற கடைநாட்
கங்கு
லூழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
வேழகத் தகரு மெகினக் கவரியுந்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந் தாமொடு
குயின்ற தகைசால் சிறப்பி னீனொடு வாயி னெடுங்கடை
கழிந்தாங் கணிகிள ரரவி னறிதுயி லமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக்
கழிந்து பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி யந்தர சாரிக
ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் போகிப்
புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் தடங்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய வைவகை

நின்ற வருகத் தானத்துச்
சந்தி யைந்துந் தம்முடன் கூடி
வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப்
பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ னீரணி
விழவினு நெடுந்தேர் விழவினுஞ் ௨



சாரணர் வருஉந் தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
இலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு
மலைதலைக் கொண்ட பேர்யாறு போலு
முலக விடைகழி யொருங்குட னீங்கிக்
கலையி லாளன் காமர் வேனிலொடு
மலைய மாருத மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
ரிலவந் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி னுழைந்து
காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து
முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ

வாறைங் காதகம் மகளுட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தென நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
காவுந்தி யையையைக் கண்டடி தொழூஉ
முருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னோ வுறுக ணாளிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறென
வுரையாட் டில்லை யுறுதவத் திர்யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ
வுரிய தன்றீங் கொழிகென வொழியீர்
மறவுரை நீத்த மாசறு கேள்விய

## ௧௦.—நாடுகாண்காதை.

றரவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்
கோவலன் காணாய் கொண்ட வின்னெறிக் கூடு
சேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு

பயில்பூந் தண்டலைப் படர்குவ மெனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த தாதுசேர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டு
முதிர்பூஞ் செம்மலி னொதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டு
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் பரற்பகை யுறுக்குங்
கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு முண்டிக் காரிகை யாங்கட்
கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னொண்டு கொள்ளவுங் கூடுங்
குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடு
மெறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்



பொறிமர் ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா

வயலுஞ் சோலையு மல்லதி யாங்கணும்
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோனொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெனத்
தோமறு * கடிஞையுஞ் சுவன்மே லறுவையுங்
காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்
கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற கடுங்குர லேற்றொடு
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே யல்ல
தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையு
முழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய

கழாமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு

---

*கடிகையெனவும் பாடம்.

## ௧௦.—நாடுகாண்காதை. ரு

கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
கருங்கை வினைஞருங் களமருங் கூடி
யொருங்குநின் றார்க்கு மொலியே யன்றியுங்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறாடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியுங்
கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
வேரோடு நின்றோ ரேர்மங் கலமு
மரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
பெருஞ்செந் நெல்லின் முகவைப் பாட்டுந்
தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்
பெரியாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளா
ருழைப்புலிக் கொடித்தே ரூரவோன்

கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்
மறையோ ராக்கிய * வாவுதி நறும்புகை
யிறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
ரிரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடு பரந்து
மங்குல்வா னத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்னா ளொருநா
ளாற்றுவீ யரங்கத்து வீற்றுவே றாகிக்

---

* வாளவிநறும்புகையென்றும், வானவருணுஅவென்றும் பாடம்.



னூற்று வழிப்பட்டோ ராரென வினவவெ…
மக்கள் காணீர் மானிடயாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென
வுடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்
தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்

காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
வெள்ளுநர் போலுமிவ ரென்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்ட தவந்தரு சாபங்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்
குறுநரி நெடுங்குரல் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினு
மறியா மையென் றறியல் வேண்டுஞ்
செய்தவத் தீர்நுந் திருமுன் பிழைத்தோர்க்
குய்திக் கால முரையீ ரோவென
வறியா மையினின் றிழிபிறப் புற்றோ
ருறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனு
முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென.

---

சிலப்பதிகாரமென்பது, சிலம்பினது அதிகரித்தலையுடையது என்னும் மொழித்தொகையாய் நூலுக்குக் காரணப்பெயராயிற்று. அதிகாரம், அதிகரித்தல். இராசநீதியிற்பிழைத்த அரசரை அறக்கடவுள் கூற்றாய் நின்று கொல்லுமென்பதும், பத்தினியை மக்களேயன்றித் தேவருமுனிவரும் ஏத்துதல் இயல்பென்பதும், முன்செய்த இருவினையும் செய்தமுறையே செய்தோனைநாடிவந்து பயனூட்டுமென்பதும் ஆகிய இம்மூன்றும் சிலம்புகாரணமாகத்தோன்றலின், நூலாசிரியராகிய இளங்கோவடிகள்,

இந் நூற்குச் சிலப்பதிகாரமென்றுபெயரிட்டனர்; இதனை, (பதிகம், அடி - ருரு- ௬௦) "அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற ருவது, மூரைசால் பத்தினிக்கு யர்ந்தோ ரேத்தலு, மூழ்வினை யுருத்துவந் தூட்டு

மென்பதூஉஞ், சூழ் கரு.—நாடுகாண்காதை.

௯

வினைச் சிலம்பு காரண மாகச், சிலப்பதி கார மென்னும் பெயரா, ஞட்டு தும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" எனபதஞு லுணர்க. சிலம்புகாரண மாக இம்மூன்றுங்தோன்றுதல், கதைச்சுருக்கத்தால் உணரப்படும்.

I புகார்காண்டம்.

புகார்-காவிரிப்பூம்பட்டினம்; காண்டம் - கூட்டம். எனவே, புகாரில் நடந்த சரித்திரத்தின் கூட்டத்தையுடையதென்பது திரண்டபொருள்.

நாடுகாண்காதை. இது, (கண்ணகியும் கோவலனும்) சோழநாட்டின் வளத்தைக் கண்டகாதை எனவிரியும். காதை - கதையையுடையது. இவர் கள் இங்ஙனம் நாட்டைக்கண்டது, சிலம்பைவிற்று வியாபாரஞ்செய்து பொ ருள்தேடும்படி நாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்தினின்றும் மதுரைக்குப்புறப் பட்டுப்போகும்பொழுதென அறிக.

க - ௩. வாள்கண் விழியா வைகறை யாமத்து
மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிருள் நின்ற கடைநாட் கங்குல்

இதன் பொருள். உலகிற்குக் கண்ணாகிய ஆதித்தன தோன்றிவிளங் காத வைகறையென்னும் யாமத்திடத்து மீனோடு அழகுபெற்றெழுகும் வெண்மதியானது விசும்பினின்றும் நீங்கிற்றாகக் கரிய இருள் கடைக்கண் நின்ற கங்குற்பொழுதிலென்க.

என்பது : அந்தச் சித்திரைத்திங்கட் புகுநாள்-சோதி, திதி-மூன்றும் பக்கம், வாரம்-ஞாயிறு; இத்திங்களிருபத்தெட்டிற் சித்திரையும் பூரணையுங் கூடிய சனிவாரத்திற கொடியேற்றி * "ஈரேழ் நாளினும்" என்பதனன் இருபத்தெட்டுநாளும் விழாநடந்து கொடியிறங்கி வைகாசி இருபத்தெட்டின்ற பூருவபக்கத்தின் பதின்மூன்றும் பக்கமும் சோமவாரமும்பெற்ற அனுடத்தில் பாட்கடலாடி ஊழ்தவின் வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்

கிழமையும் கேட்டையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப் பதினலாம் பக்கத்து வைகறைப்பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தாத்திருளிலே யென்றவாறு. அது பூருவபக்கமென்பது தோன்றக் காரிருளின்ற கடைநாட் கங் குலென்றார் ; † "குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றெய்வஞ கெ

டுகநின் றெவ்வராக்கம்" என இருண்மதியென்றார் மதுரைக்காஞ்சியுள்ளும். கண் - இறைவன்கண்ணென்பாருமுளர். விழித்தல் - விளங்குதல் ; அது

---

* மணிமேகலை, முதலாவது விழாவறைகாதை: "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன், விண், னவர் தலைவனை வணங்கிமுன் னின்று,

மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுள், மேலோர் விழைய விழாக்கோ

ளெடுத்த, நாலேழ்நாளினு நன்கினி துறைகென, வமரர் தலைவ னுங்கதி

நேர்ந்தது"

† பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, கசுறு - கசுசு.

2



செய்யாதவைகறை - ஆகுபெயர் ; வைகல் - துயிறல் ; அறல் - அறைமயிற்று ; "பொறியறை" போல.

( * குறிப்பு. ) † [காரிருள் நின்ற கடை நாள் - காரிருள்

ன் றும், வைகாசிமாதத்தின பூதற்றயத் மங்க ாரூம்
கிருஷ்ண
இருதியையுங்கூ டின அருடமென்றய் உணர்க. பூ நவபக்கம -
வளர்
பிறைக்காலம் ; சுக்கிலபக்ஷம். பதினமூன்றுமபக்கம் - த்ரயோதசி.
ஈரட்
கடலாடி - சமுத்திரத்தில் உற்சவார்தத்தில அவப்ருதஸ்நானஞ்
செய்து.
ஊடலின் - கோவலன் தனது காதற்பரத்தையாகிய மாதவியுடனே
பிணை
க்கி வெறுப்புற்றதனல். செவ்வாய்க்கிழமையும்
கேட்டைநக்ஷத்திரமுங்
கூடினல், அசுபகரமான உற்பாதயோகமாம்.
நிறைமதிப்பதினைலாம்பக்

---

*குறிப்பென்ற தலைப்பையுடையவைகள் மட்டுமே நூதனமாக
எழுதப்
பட்டவை.

†[ ] இவ்விருதலைப்பகரத்தினுட்பட்டவற்றைச்
சிலப்பதிகாரத்தின்
பழைய உரையாகிய அரும்பதவுரையெனக் கொள்க.



கம் - பௌர்ணமிக்கு முந்தின நாள் ; சுக்லசதுர்த்தசி. நிலவுபட்ட -
நிலா
ச்சாய்ந்துபோன. " குணமுதல்" என்னும் மேறகோளுக்கு,
குணமுதல்
தோன்றிய ஆர் இருள் மதியின் நின் தெவ்வர் ஆக்கம் தேய்வன

அவை அவ்வூர்ப் புத்தசைத்தியத்து இந்திரன் நிருமித்தனவாகிய
எழரங்கு. மாபோதியைந் துபணையது.........இயல்பு.
திருமொழி-ஆகமம்.
அறைந்து சாற்றுதல் - பாடமோதிப் பொருளுரைத்தல். விகாரம் - கை
யாற் கருவியாற் பண்ணாது மனத்தால் நிருமித்தல்.

(கு - பு.) [போதிக்கு ஐந்துகொம்பாதலால், 'பணையைந் தோங்கிய' என்றார். திருமொழி - தருமம்.] பணை - கிளை. மாபோதி - சிறந்ததும் பெரியதுமாகிய அரசமரம். அறவோன் - தருமசொரூபி. அடைவே - வரிசையாக. புத்தசைத்தியம் - பௌத்தவித்தியாசாலை; புத்தனாலயமுமாம். அரங்கு - இடம். "மாபோதி" என்பது, இடம் விளங்காமேற்கோள். பாடமோதல் - மூலத்தை விளங்கச் சொல்லுதல்.

கரு - ௨௫. புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் தடக்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய
மைவரை நின்ற வருகத் தானத்துச்
சந்தி யைந்துந் தம்முடன் கூடி
வந்துதலை மயங்கிய வான்பெரு மன்றத்துப்
பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ
னீரணி விழவினு நெடுந்தேர் விழவினுஞ்
சாரணர் வரூஉந் தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
விலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு

இ - ள். புலாலாகிய உணவைத்துறந்து பொய்கூறுமையாகிய விரதத்தோடு பொருந்தி அழுக்காறு அவாமுதலியவற்றைக் கைவிட்டு அறநூல் முதலியவற்றையறிந்து ஐம்புலனையுமடக்கிய கோட்பாட்டையுடையராய் உண்மையைவகையுணர்ந்த சிறியோர் திரண்ட ஸ்ரீகோயிலில் பஞ்சபரமேட்டி களும் பொருந்த ஐஞ்சந்தியுங்கூடி வந்து தலைமயங்கியிருக்கின்ற மிக்க பெரிய மனறிலே பூவையுடைய

அசோகினது அழகுகினாரும் நிழறகண்ணே வஷ்டீ அயனூதிகளிலும் விழவுகளிலும் ஆகாய சாரிகள் வரத்தருமென்று சாவகம்ரல்லாம் கூடியிடப்பட்ட விளங்கா நின்ற ஒளியையுடைய சிலாவட்டத்தை இவர்கள்தொழுது வலங்கொண்டென்க.

புலவூண் - புலாலோடே உண்ணுமூணுமாம். புலியூண் பாடமாயிற் புலியருண்ணுமூணென்க. ஐவகை - பஞ்சபரமேட்டிகள்; ஆவார்: அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதிக்கவெனவிவர்; இனி ஐவகை நின்ற வருகத் தானத்துச் சந்தி..... . ...மன்றென்பதற்கு ஐந்து ஸ்ரீகோயிற் சந்திகூடிய மன்றென்பாருமுளர். பொன்பொலிவாதலன்றிப் பொலம்பொலிவாகாமையின் அருகனுழையான எப்பொழுதும் பொற்பூவைப்பூக்கும் பிண்டியென்க. சிலாதலம - சந்திரகாந்தக்கல்லாற படுத்தது. நீரணிவிழவு - அபிடேகவிழவெனினுமமையும்.



(கு - பு.) [புலியூன் - மச்சமாங்கிசம். (கரு) பொய்யா விரதத்து (கஎ) விழுமியோரென்க. விரதத்தோடே அடங்கிய. ஐவகை நின்ற கோயில்- ஐந்து சந்திக்கும் ஐந்து கோயிலாய் நின்ற கோயில். சந்தியைந்து - ஐஞ் சாதி ; அவையாவன : பஞ்சபரமேட்டிகள்தெரு. இவர்கள்கூடின மன்று. (உo) இம்மன்றிற் (உக) பிண்டி நிழலிலே (உச) யிட்ட (உரு) சிலாதலமென்க. நீரணி விழவு - திருவபிடேகவிழவு ; அயனம், சங்கிரமம்; புதுப்புனலாட்டினவுமாம. தேர் விழவு - திருநாள். உலகநோனபிகள் -

உலகவழும்
கோடு பொருந்தின நோன்பிகள்; அவர்: இல்லறத்தையுடைய
சாவகர்.]
புலால் - மாம்ஸம். ஊன் - உண்ணப்படுவது. துறத்தல் - நீக்குதல்.
அவ
லம் - துன்பந்தருபவை. அறநூல் - தருமசாஸ்திரம். தலைமயங்குதல -
கல
த்தல். மன்று - பொதுவிடம். பிண்டி - அசோகமரம். விஷு -
சித்திரை
ஐப்பசிமாசப் பிறப்புக்கள். பகலும் இரவும்
பொழுதொத்திருக்குங்காலம்,
வடமொழியில் விஷுவத் அல்லது விஷுவம் எனப்படும். அயனத்திக
ள் -
தக்ஷிணயனத் தொடக்கமாகிய ஆடிமாசப்பிறப்பும், உத்தராயணத்
தொட
க்கமாகிய தைமாசப்பிறப்பும். விழவு - திருவிழா. கலாவட்டம் -
வட்ட
வடிவமாகிய கல். தொழுது - நமஸ்கரித்து.
வலங்கொண்டு-பிரதக்ஷிணஞ்
செய்து. முதலியன
என்றது, வெகுளி இன்னாசொற்களை; "அழுக்காறவா
வெகுளியின்னாச்சொன்னான்கு, மிழுக்காவியன்றதறம்" என்றார்,
திருக்கு
றளில். ஆணை - ஸங்கல்பம், கட்டளை. சந்திரகாந்தம் -
சந்திரனதுகிரணத்தினா
யில் நீர்காலுங் கல்.
உக - உஎ. மலைதலைக்கொண்ட பேர்யாறு போல
முலைக ளிடைகழி யொருங்குட னீங்கி
இ - ள் மலையிடத்தே தலையையுடையதோர்
பெரியாறுபோல உலகினுள்ளோராயவர் போக்குவரவு
செய்தற்கமைந்த ஊர்வாயிலை அக்காலத்துப் போவாரோடு கலந்துபோய்
அதனைவிட்டுநீங்கியென்க.

உலகவிடைகழி-ஊர்வாயில். இடையேகழிதலின, அவ்வாயில் இடைகழியாயிற்று. கோயிற்கோபுரத்தை மலையாகவும், அதனோடு மலைந்துகிடந்ததெருவை ஆறாகவும் உவமித்தார்.

(கு - பு.) [வாயிலுக்கு உவமம் - மலை. தெருவுக்கு உவமம் - யாறு. உலகவிடைகழி - உலகத்தாரெல்லாரும் போகலான ஊர்வாயில; தெரு வீட்டு ஒழுங்குக்கு இடையே கழிதலால், இடைகழி.]

உஅ - கக. கலையி லாளன காமர் வேனிலொடு
மலய மாருத மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
ரிலவந் திகையி னெயிற்புறம் போகி

இ - ள். மன்னவற்குக் காமன் வேனிலோடு தென்றலையும் இறையாக இடுதற்குப்பொருந்திய பலமலர்களை நிரைத்த நல்ல மரநிழலையுடைய இலவந்திகையினது எயிற்குப் புறத்திலேபோயென்க.



கலையிலாளன் - அநங்கன்; கலை - சரீரம். காமர்-அழகு. பந்தர் - நிழல்.
இலவந்திகை - நீராவியைச்சூழ்ந்த வயந்தசோலை. அஃது அரசனும் உரி
மையுமாடுஞ் காவற்சோலை; * "இலவந் திகையி னெயிற்புறம் போகி, ஞாலக மன்னவ னுழையோ ராங்குளர்" என்றார் மணிமேகலையிலும்.

(கு - பு.) [கலை - சரீரம்; அன்றிக் கலையிலாளன் என்றது-கலைகளில் நின்றான் காமன். மன்னவன - சோழன். இறுக்கும் - இறையிடும். மரப் பந்தர் - சோலை யென்றுமாம். காமன வேனிற் காலத்தையும் தென்றலையும் சோழனுக்குத் திறையிடும் பொழிலையுடைய எயில். இலவந்திகை-
நீராவி. எயில்-சுற்றுமதில். சோலையையும் பொய்கையையு முடைய எயிலெனறுமாம்.] வேனில் - வசந்தம். இறை - அரசிறை. நிரைத்த - ஒழுங்காக
நிறுத்திய. இலவந்திகை - யந்திரவாவியுமாம். 'இலவந்திகையின'

என்னும் மேறகோருக்கு - உத்தியானவனத்தினூ மதிலின் வெளியிலே சென்றால் உலகத்தாசனது பக்கத்தோர் அவ்விடத்திலுள்ளார்கள் என்று பொருள்.

அடி - ருரு. நாழ்பொழி லுடுந்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து

இ - ள். இருபக்கமும் சோலைசூழ்ந்த புதுப்புனலாடப்போம் பெரிய வீதியையுடைய காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்றவாயிலையும்கழிந்தென்க.

கடைமுகங்கழிந்தென்றார், காலையில் நாணீராடுவோர் பிறர்முகநோக்காது போதற்கு மறைந்துகழிவர்; இவரும் அவ்வாறுகழிந்தாரென்றற்கு.

(கு - பு.) [தண்பதப்பெருவழி - புனலாட்டுக்குப் போம் பெருவழி; திருமஞ்சனப்பெருவழியுமாம்; காவிரிக்கரையிடத்துவாயில்.] காவிரி - காவேரி எனனும் வடசொல்லின் திரிபு; கவேர னென்னும் அரசனது மகளென்பது பொருள்.

ருச. குடதிசைக் கொண்டு—இ - ள். மேற்றிசையைநோக்கிக் கொண்டு,

(கு - பு.) குடக்கு - மேற்கு.

---

* மணிமேகலை, மூன்றாவது மலர்வனம்புகுகாதை: "பன்மல ரடுக்கிய நன்மாப் பந்த, ரிலவந் திகையி னெயிற்புறம் போகி, னுலக மன்னவ னுழையோ ராங்குளர், விண்ணவர் கோமான் விழாக்கொ ணன்னாண், மண்ணவர் விழையார் வானவ ரல்லது, பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும், வாடா மாமலர் மாலைக ளேக்கலிற், கைபெய் பாசத்துப் பூதங் காக்குமென், றுய்யா னத்திடை யுணர்ந்தோர் செல்லார், வெங்கதிர் வெம்மையின் விரிசிறை யிழந்த, சம்பாதி யிருந்த சம்பாதிவனமுந், தவாநீர்க் காவிரிப் பாவைதன் றாதை, கவே ரனுங் கிருந்த கவேர வனமு, மூப்புடை முதுமைய தாக்க ணங் குடைய, யாப்புடைத் தாக வறிந்தோ ரெய்தார்."

௩௪ - ௩௫. கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி னுழைந்து

இ - ள். வளவிய புனலையுடைய காவிரியினது பெரிய வடகரையிற் பொழிலைக்கழிந்தென்க.

கோடு - கரை. நுழைதல் - கழிதல். அன்றி இளமரக்காவாதலால், தாழ்ந்த கோட்டிடை நுழைந்துபோயெனவுமாம்.

(கு - பு.) வளவிய புனல் - அதிகமான நீர். பொழில் - சோலை.

௩௬ - ௪௧. காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து
முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ

இ - ள். நறிய ஐவகைக் கூந்தலையுடையாள் அங்ஙனம் காதமென்று சொல்லப்படும் எல்லையைக்கடந்துசென்று கவுந்தியடிகளிருக்கின்ற பள்ளிக்கு அயலதோர் பொழிலினையுடைய செறிந்த இளமரச்சோலையளவுஞ்சென்றுபொருந்தி அவ்விடத்தே இள இஃது இறுமெனத்தக்க கொடிபோலும் இடையும் அடியும் மிகவும் வருந்தி மேல் இளைப்பாற் குறுகவுயிர்த்து முற்றுதமழலைமொழியாலே கூர்த்த எயிறிலங்க மதுரையென்னுமூதூர் யாதென்று கேட்பவென்க.

காவதம் - காதம். பொதும்பர் - மரச்செறிவு; கோடரமென்றுமாம்.

(கு - பு.) [கவுந்தியடிகள் பள்ளியையுடைய கோவில்] காதம் -
ஏழுநாழிகைவழி. இறும் - ஒடியும். இனைந்து வருந்தி - ஒருபொருட்பன்
மொழி. உயிர்த்து - மூச்சுவிட்டு. மூதூர் - பழையவூர்.
ஐயனைக்கூந்தல் -
முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்பன; இவற்றுள், மயிரை உச்சியில் முடித்தல் முடி; பக்கல் முடித்தல் கொண்டை;
பின்னலைச் செருகல் சுருள்; சுருட்டி முடித்தல் குழல்; பின்னி விடுதல் பனிச்சை. ௬௨ - ௬௩. ஆறைங் காதநம் மகனாட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தே யென்றக்கு
இ - ள். நீகூறிய மதுரை நம் அகன்றநாட்டிறகுமேல் ஆறைங்காவதங்காண் இனி அணுகியதென்று கூறி நகைத்தென்க.
யாதென்றவட்கு முப்பதென்னும் பொருள்மறைந்து காதம் ஆறைம் காத மென்றாற்போலிருத்தற்கு ஆறைங்காதமென்றான்.
நகுதல் - அன்பு நகை. கூந்தல் - விளி.
(கு - பு.) [ஆறைங்காதம் - முப்பது காதம்;
ஆறைங்காதமென்றான் - அவட்கு அறுகாதம் ஐங்காதம் என்றாற் போலத் தோன்ற. கூந்தல் - பெயர். ௧௦.—நாடுகொண்காதை-கன

நக்கு - நகைத்து. நகுதல் - சோகத்தாற் பிறந்த விகாரம்.] அகல் நாடு - அக
ன்றநாடு எனவிரிகின்றமையின் வினைத்தொகையாயிற்று. அன்பத்தால் நகை புண்டாதலை, "எள்ளல் இளமைபேதைமை மடனென்றுள்ளப் பட்ட நகைநான் கென்ப" என்னுஞ் சூத்திரத்து 'உள்ளப்பட்ட' என்பதனாற் கொள்க.
௬௪ - ௬௫. தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்
இ - ள். அங்ஙனம் வினவின கண்ணகியோடுசென்று தவவேலிக்கணிருந்த கவுந்தியடிகளைக் கண்டு அடிதொழுதலுமென்க.

சிறை - பள்ளியென்றுமாம்; ஸ்ரீகோயிலின் ஒருபக்கமுமாம்.

(அ) கழிந்து (கo) கழிந்து (கச) போகிக் (உரு) கொண்டு(உஎ)நீங்கிப் (ருக) போகிக் (ருரு) கழிந்து(ருரு) நுழைந்து(ருசு)கடந்து(ருஎ)பொருந்தி (சரு) நக்குக் (சரு) கண்டு அடிதொழுதுமென்க.

(கு - பு.) [சிறையகம் - ஸ்ரீகோயில் ஒருபக்கத்தே பள்ளியகம்.] தேமொழி - தேன்போலுஞ் சொற்களையுடைய கண்ணகி ; உவமைத்தொகை

ன்மொழி. தவவேலி - தவமாகிய காவல்.

ஐயை - தவப்பெண்; இஃது, ஐயன் என்பதன் பெண்பால் போலும். பள்ளி - ஆச்சிரமம். தொழுதலெ ன்னும் வினைக்குக் கோவலன் எழுவாயென அறிக.

சசு - சஞ.

உருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னே வுறுக ணாளரிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறெனமு ம்

இ - ள். இவர்கள் தொழுதார்களாக, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்க இறைவனருளிற்கூறிய விரதந்தப்பாமையுமென்னும் இவற்றையெல்லா ம் ஒருதலையாகவுடைய நீங்கள் தீவினையாளரைப்போலே நுமதிடத்தைக் கழிந்துவருவத ற்குக் கருதியதென்னேவென்றுகேட்பவென்க.

பெருமகன் - அருகதேவன். திருமொழி - அவனருளிச்செய்த ஆக மம். உறுகணாளர் - மிடியாளரென்பாருமுளர். கடைகழிதல் இவர்க்கு மர பன்மையிற் கழிந்தென்றார். இவ்வும்மைகள் எண்ணுக்குறித்தனவெனினும் சிறப்புப்பொருண்மை தோன்றநின்றன.

(கு - பு.) [உறுகணாளரின் - துன்பமுறும் பாவமுடையார்போல; மிடியாளரைப்போல என்றுமாம். கடை கழிந்து - வாசலைவிட்டு.] ஒருதலை யாக - நிச்சயமாக. மிடியாளர் - வறியவர். மரபன்மையின் - முறைமை யல்லாமையால்.

௫0 - ௫க. உரையாட் டில்லை யுறுதவத் தீர்யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்

இ - ள். மிக்க தவத்தினையுடையீர், இவ்வினாவிற்கு ஓர் உத்தரமில்லை; ஆயினும் யான் கருதியதொன்றுண்டு; அதுயாதெனின், மதுரையாகிய

3



பழையவூரிற்சென்று கிருமித்தபொருளைத்தேடக்கடவோமென்னும் வேட்கையையுடையேனாயினேனென்று சொல்லவென்க.

முன்னர்க்காதையில் * "சென்ற கலனோ, டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன்" என்றானாகலின், அதனை வரைபொருளென்றான். இவ் வியாயத் திற்றேடும்பொருளெனினுமமையும். அன்றி, இதற்கு இத்துணைப்பொரு ட்கு மேற்பட்டதே தானம் பண்ணக் கடவேனென வரைந்தபொருளென் பாருமுளர். எனவென ஒருசொல் வருவிக்க.

இனிக் கவுந்தியடிகள் கூறுவார்.

(கு - பு.) [உரையாட்டில்லை - சொல்லாவதொன்றில்லை ஒருவாசகம். மூதூர்க்கண்ணே பொருளீட்டும் வேட்கையேன : பொருள்வரைதல் வேட் கையென்க ; வரைதல் - தன்னிடத்தாக்குதல் ; இன்னதற்கு மேற்பட்டது தானத்துக்கே என்று வரைந்திடுதலுமாம்.] நிருமித்த-யான் சங்கல்பித்த. வேட்கை - விருப்பம். சென்றகலனோடு என்னும் மேற்கோளுக்கு - முன்பு நான் வாங்கியழித்த ஆபரணத்தையும் அல்லாக் கெட்ட பொருளையும் தேடித்தொகுத்தலைத் துணிந்தேன் எனறுபொருள். வரைதல் - வரையறை செய்தல்.

௫உ - ௫௪. பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ

இ - ள். இனி அக்காரியங்கருத்தாயின், இவளது பாடகமணிந்த சிறிய அடி பருக்கையாகியபகையை வெல்லமாட்டா ; ஆதலால் நீர் காடுநாடுமென் னும் இவ்வழியைக்கடத்தற்கு இவள் செவ்வி

ஏற்றதனற்; இனிவூழ் என் செய்துமுடிக்குமோ ; அதனை அறிவாராரென்றுரென்க.

என்றகருத்து : அடி பரற்பகையுழவா : வழிகாடு டையிட்டநாடு : இவள் அதற்கேற்றதன்மையளல்லள்; இனி ஊழ் என்செயுமோ, இதனை யாரறிய வல்லாரெனப் பரிவுறன் தோன்றநின்றது.

(கு - பு.) [பாற்பகை உழக்கமாட்டா. காடும் நாடுமாகிய வழிக்கடக்க. அரிதிவள்செவ்வி - இவள் செவ்வியில் மென்மையால் நடக்குந்தன்மையிலளென்றதாம். அறிகுநர்யாரோ-வல்லளாகவும் அடுக்குமன்றே.] ஊழ் - விதி. பரிவுறல் - இரங்குதல்.

ருரு. உரிய தன்றீங் கொழிகென வொழியீர்

இ - ள். இவையேயன்றியும் குடிப்பிறப்பிற்கும் இவளை ஒருங்கு கொண்டு சேறல் ஏலாதாகலின் இனிச் செலவை ஒழிமினென்று யாமொழிப்பவும் ஒழிகின்றிலீராயினீரென்றுரென்க.

---

* கனாத்திறமுரைத்தகாதை, எசு - எரு.



ஒழிகென வொழியீரென்பதற்கு இவர்க்கு எதிர்வதறிந்து கூறினரெனின், ‡ "தவந்தரு சிறப்பிற் கவுந்தி.........உண்ணோன்போ டுயர் பதிப் பெயர்ந்ததும்" என நீர்ப்படையுள் மாடலன் கூறுதலானும், அடைக்கலக்காதையில, § "தன்குல வாணர், அரும்பொருள் பெறுநரின் விருந் தெதிர் கொண்டு, கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவ, துடைப் பெருஞ் செல்வர் மனைப்புகுமளவு, மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்" எனவும், $ "தாயு நீயே யாகித் தாங்கு" எனவும், || "மிகப் பேரின்பந் தருவது கேளாய்" எனவும் ஒருபொழுதிற்கு இத்துணை ஓம் படையெல்லாம் கூறவேண்டாவாகலானும் இவர்க்குத் தவப்பயனாலே சுபிந்தலன்றிக் காலவுணர்ச்சியின்மையுணர்க.

(கு - பு.) ஒருங்கு கொண்டுசேறல் ஏலாது - கூட அழைத்துக்கொண்டுபோதல் பொருந்தாது. செலவு - செல்லுத எதிர்வது - இனிவருவது. தவாதரு என்னும் மேற்கோளுக்குத் தவ ஒழுக்கம் வளருகின்ற சிறப்பை யுடைய கவுந்தியென்னும் முதியவள் .........உணவுண்ணுமையாகியவிரதத்
ஆன உயர்ந்த தனது இருப்பிடத்திலருகுப் புறப்பட்டதும் என்று பொருள்.
நீர்ப்படை-இந்நாலின் உஎ-வது காதை; வஞ்சிக்காண்டத்தில்உள்ளது. மாடலன் - தலைச்செயகானத்துள்ள ஓர்தணன ; கோவலனுடைய நட்பாளன். கோவலன் மதுரையிற்கொலையுண்டது முதலியவற்றைக் காவிரிப் பூம்பட்டினத்தார்க்குச் சொல்லித் தன்செ... அவர்களிற் சிலர் இறந்தமை தெரிந்து அப்பாவத்தைப்போக்குதற்பொருட்டுப் போய்க் கங்கையாடி மீளுகையில் இடையே சேரன் செங்குட்டுவனைக் கண்டு அளவளாவி வஞ்சி நகரஞ்சார்ந்து யாகஞ்செய்யும்படி தூண்டி அதுசெய்வித்து அவனை ...லவ ...ப்படுத்தினவ ன்.
அடைக்கலக்காதை - இந்நூலின் பதினைந்தாவது பகுதி; மதுரைக்காண்டத்துள்ளது. தன்குலவாணர் என்பதற்குப்பொருள் - இவன்குலத்திலுள்ள இவ்வூரில்வாழ்வோர் ... றுதற்கரிய பொருளைப்பெற்றாரைப்போல நல்விருந்தாக எதிர்கொண்டு கரிய பெரிய கண்ணி
...யுடையாளோடு இவனைத் தங்கள் காவலையுடைய மனையகத்தே கொண்டு சென்று வைத்துக்கொள்வார்கள் ; அங்ஙனமாகிய உடைய பெரிய செல்வ ... அமனையகத்தே சென்று புகுமளவும்
இடைக்குலமடந்தாய், உனக்கு நான் இவளை
அடைக் கலமாகத்தந்தேன் என்க. தாயு நீயேயாகித் தாங்கு என்பதற்கு - இவளுக்கு நற்றாயும் நீயேயாய்த் தாங்குவாயாகவென்று பொருள். மிகப் பேரின்பந்தருவது கேளாயென்பதற்கு-இன்பு மிகப் பேரின்பந் தருவதற்கான ...ன் சொல்லை நீ கேளாயென்றுபொருள். இவைமூன் ... மாதரிடை பமை... க்கிக் கண்ணகிவிஷயமாகக் கவுந்தியடிகள் கூறும்வார்த்தை. ஓம்படை - காவல். கால உணர்ச்சி - திரிகாலஞ்ஞானம்,

† நீர்ப்படை, எசு - அக. § அடைக்கலக்காதை, கஙசு.

§ அடைக்கலக் காதை, கஉசு - கஙப



ருசு - சுரு. மறவுரை நீத்த மாசறு கேள்வி
யறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனென

இ - ள். மறவுரைகளை நீத்திருக்கும் குற்றமற்ற பொருட்பயனையுடை யவர்தம்நூலையுங்கேட்டு அந்த ஆகமப்படியே அறிவனையேத்துதற்குத் தெற்கின்கணுள்ள தமிழ்நாட்டின் கண்ணதாகிய குற்றந்தீர்ந்த மதுரைக்குப்போதற்கு முன்னே ஒருப்பட்ட உள்ளமுடையேனாதலின், யான்போகுவேன்; நீரும் போதுமினென்ற கவுந்தியடிகளைக் கையாற்றொழுது நாவாலேத்தி, அடிகளே! நீரே இவ்வணம் அருள்செய்வீராயின், இவ் வளை வாகிய வளைபொருந்திய தோளியையுடையாளுடைய துயரெல்லாம் இப்பொழுதே போக்கினேனன்றேயென்று சொல்லவென்க.

நீயிரே இதுசெய்வீராயினென்பது ஓர் வழக்கு. ஏகாரத்தை இசை நிறையாக்கலுமொன்று. தொடி - வளை வு ; * "தொடிக்கட் பூவை" என்றாராகலின். நீத்தென்றும் பாடம்.

(கு - பு.) [மதுரைக்கொன்றிய வென்பதற்கு - போகவென ஒரு சொல்வருவிக்க. என்தொடிவளைத்தோளிதுயர்தீர்த்தேனென்று

கோவலன் சொல்ல.] மறவுரை - குற்றத்தோடு பொருந்தியவார்த்தை; அஃதவபொய், கோள், கடுஞ்சொல், பயனில்சொல் என்பன. நீத்தல் - விடுதல். கேள்வியர் - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டுள்ளவர். அறவுரை - தருமசாஸ்திரம். அறிவன் - எல்லாப்பொருளையும் அறியும் அறிவையுடைய அருகக்கடவுள். ஏத்துதல் - துதித்தல். தமிழ்நாடு - பாண்டிநாடு. தமிழ்முனிவராகிய அகத்தியருக்கும் தமிழைவளர்த்த பாண்டியர்களுக்கும் சங்கப்புலவர்களுக்கும் உறைவிடமாதலால், பாண்டியவளநாடு செந்தமிழ்நாடு எனப்படும். ஒருப்பட்ட - உடன்பட்ட. தொடிக்கட்பூவை என்னுஞ் சிந்தாமணி மேற்கோளுக்கு - தொடிபோல் வட்டமான கண்ணையுடைய பூவையென்பது நச்சினார்க்கினியருரை. தொடிவளைவென்பது, அடியார்க்குநல்லார் கருத்து. நீத்து என்ற பாடத்துக்கு- மறவுரைகளை நீத்தலாற் குற்றமற்ற கேள்வியையுடையாரென்க.

---

* சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், அ௨ : "வடிக்கண் மகளிர் வைத்த மரகதகன் மணிக, ளொடிக்கச் சுடர்விட் டுமிழ வுளழியும் பிணையொன்றணுகிக், கொடிப்புல் லென்று கறிப்பா ளுவிற் குலவி வளைப்பத், தொடிக்கட் பூவை நோக்கி நகுமா றெளிதோ காண்மின்."



சுசு - சுரு. கோவலன் காணாய் கொண்ட விந்நெறிக்
கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ

இ - ள். கோவலனே, நாம் போவதாகவுட்கொண்ட இந்நெறியிடத்து வருத்தத்தைத் தருவன எவ்விடத்தும் பலவுள ; அவற்றை நீயறியாய்; ஆதலால், யான் சொல்லக் கேட்பாயாகவென்றாளென்க.

காணாய் - நீ முன்பு அறியாய். இந்நெறி - வடகரைவழி. மோரும்முன்னிலையசை.

௬௬ - ௭௧. வெயினிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் படர்குவ மெனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த தாதுசேர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டும்

இ - ள். வெயிலினது நிறத்தைக் கண்ணுற்பார்க்கவும் பொறாத இம் மெல்லிய இயல்பினையுடையவளைக்கொண்டு நாம் பூப்பயிலும் தண்டலை யூடு போகக்கடவேமென்பேமாயின், அவ்விடத்து நிலம்பிளக்கும்படி இட கொண்டு கீழ்வீழ்ந்த வள்ளிகிழங்கை அகழ்ந்துகொண்ட குழிகளைச் சண்பகமரங்கணிறைத்த பூந்தாதுசேர்ந்த பழம்பூ பொய்க்குழிப்படுவி த்து அவ்விடங்களை அறிந்து பாதுகாத்துச்செல்லாதமாக்கட்குச் செயலறுதி யாகிய துன்பத்தைக் காட்டுதலையுஞ்செய்யுமென்றுரென்க.

பொங்கர் - இங்கே வாடற்பூ. அதுபோர்த்தலாற் பொய்யறைப் படுத் தென்றார். * "பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" என்பர் மேலும். கையறு துன்பம் - மீளாத்துன்பமுமாம். காட்டல் - தருதல்.

(௬௯)பொங்கர் (௭௦) படுத்துக் (௭௧) காட்டுமென்க.

(கு - பு.) [படர்குவமாயினென்றாள், தன்னையும் உளப்படுத்தி. சண் - நம் குழியைநிறைத்த பொங்கர். போற்றாமாக்கள் - பரிகரித்துப்போகா மாக்கள். குழியைச் சண்பகநிறைத்த தாது சேர்பொங்கர் பரிகரியாமாக் கட்குத் துன்பந்தரினுந்தரும்; பூவ ாணிறைத்தல் பெற்றாம்; தாது சேர் பொங்கரென்றலின். பொங்கர் - சோலையுமாம்.] மெல்லியல் - பண்புத் தொகை யன்மொழி. தண்டலை-தண்மையாகிய இடத்தையுடையது எனச் சோலைக்குப் பண்புத்தொகையன்மொழியாகிய காரணப்பெயர். "பொங் கர்" என்பதற்கு - புன்கமரங்கள் பழம்பூவாகிய வெள்ளியபொரிகளைச்சிந் தினவென்று பொருள்.

௭௨ - ௭௫. உதிர்பூஞ் செம்மலி ஞெதுங்கினர் கழிவோர்

முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டும்

---

---

* வேட்டுவவரி, "செம்பொன்."



இ - ள். அங்ஙனம் உதிர்ந்த வாடற்பூ மறைத்த குழியுள்ளவழி நாடு தற்கு நிலநோக்கி ஒதுங்கிச்செல்வோரை முற்றிப்பழுத்து விண்டு தேனொழுகும் பலாப்பழங்கள் தாழ்ந்தகோட்டின்கணிருந்து பகைபோல முட்டுதலையுஞ்செய்யுமென்றுரைக்க.

இனித் தேமென்பதனை இனிமையாக்கித் தெங்கம்பழம் முட்டுமென்னினு மமையும். முட்டினுமுட்டுவரென்பது பாடமாயின், கழிவோர் மெய்ப்பிழ ஞ் செய்வாரெனக. உம்மையை ஐயஉம்மையாக்கிப் பொருளுரைக்க. படர்கு வமெனினேயெனக் கழிவோர்கருத்தைக் கொண்டு கூறினர், உலகியலாக லான்.

(கு - பு.) [மேல்தூங்குகிற பழமாகிய பகையிலே முட்டினும் முட்டுவர்.] செம்மற்பூ - பழம்பூ. கோடு - மரக்கிளை. தெங்கம்பழம் - முற்றின தேங்காய் ; "காய்மாண்டதெங்கின்பழம்" என்றார் சிந்தாமணியாரும். எச - எரு. மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்

செஞ்சுளைப் பலவின பரற்பகை யுறுக்கும்

இ - ள். அவ்வாறன்றி வெள்ளிடைப் போவோமெனின், ஆங்கு மஞ்சள் முதலியன தம்மில் தலைமயங்கிய பிணக்கத்தையுடைய தோட்டங்களிற் பாத்திதோறும் பலாப்பழத்தின் செஞ்சுளைகளினுள்ள வெண்காழாகிய பருக்கைகள் இவள்மெல்லடிக்குப் பகையாய் உறுத்தலைச் செய்யுமென்றுரைக்க.

வலயம் - பாத்தி. வலயத்தோடு பரலும் பகையாயுறுக்குமெனினுமமையும். உறுக்கும் - உறுத்தும். என்றகருத்து : மஞ்சள் முதலியன நில வண்மையால் முற்றிப்

பருவகுலிசெய்தமுஙீ சருகிலர்மலறாந்தகிடந்தவற் ரேூடு பாலும் உறுத்தியெனப்படதாம்.

(கு - பு.) [வலயம்-தோட்டம்.] வெள்ளிடை - வெளிப்பிடம். பிணக்கம் - நெருக்கம்.

எசு - எஎ. கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே

இ - ள். கயல்போலும் கண்ணிணையுடையாள் காதலிக்கப்பட்ட கேள்வனே, அங்ஙனம் சோலையும் தோட்டமுமாகிய கரைவழியன்றி வயல்வழியேபோகக்கடவேமென்பேமாயின்,

(கு - பு.) கயல் - ஒருவகைமீன் ; இது பிறழ்ச்சியாற் கண்ணுக்கு உவமம். கண்ணி, இ - பெண்பாற் பெயர்விகுதி. காதலித்தல் - விரும்புதல். கேள்வன் - கணவன்.

எஎ - அக. ஆங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு முண்டிக் காரிகை

## கo—நாடுகாண்காதை. உரு.

இ - ள். தம்மிடத்துமலர்ந்தபூக்களின் மணங்கமழாநின்ற குளங்களில் நீர்நாய் பொருகின்றகயல்கள் வெருவியோடவோட்டிக் கௌவப்பட்ட நீண்ட முதுகையுடையவாளை மலங்குகள் பிறழுஞ்செறுவிற் குறுக்கேபாயுமாயின், இம்மங்கை கலங்குந்தன்மையுடையாளெனவும் கூடுமென்று கொள்க.

நீர்நாய் கௌவியவாளை பொருகயலோட்டிப் பாயினெனினுமமையும். இதனாற்சொல்லியது: மீனிரைதேரும் நீர் நாய்காணினும், இடையே பொருகயல்கள் உகளக்காணினும், வாளை பாயக்காணினும், மலங்கு மிளிரக்காணினும் மனத்திற் கலங்கலுமுண்டு இக்காரிகையென்பதாம்.

(கு - பு.) வாளை மலங்கு என்பன - மீனின்ஜாதிபேதம். செறு வயல். காரிகை - அழகுடைய பெண். உகள - புரண்டுபாய. அக - அறு.

ஆங்கட்

கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னொண்டு கொள்ளவுங் கூடும்

இ - ள். அஃதன்றியும், * கரும்பல்லதுகாடின்மையான் அவ்விடத்து உளதாய கரும்பின்வைத்த பெருந்தேன் அலவை கண்முற்றி நெருங்குதலானே அழிந்தொழுகிச் சுரும்புசூழப்பட்ட பொய்கையின் நல்லநீரோடு சென்று கலந்துவிடும்; ஆதலான் அதனை அறியாமல் தணியாத நீர்வேட்கையால் இவள் தன்குடங்கையால் முகந்துகொண்டு பருகவுந் தகுமென்றுரைக்க.

குடங்கையாவது ஐந்துவிரலுங்கூட்டி உட்குழிப்பது; என்னை? "குடங்கையென்பது கூறுங் காலை, யுடங்குவிரற் கூட்டி யுட்குழிப் பதுவே" யென்றாராகலின். இதனாற்சொல்லியது: நமது தரிசனத்து விலக்கப்பட்ட வாற்றால், தேனுண்டலைப் பரிகரிக்கவென்பதாம். எனவே ஊனையும் உடன் கூறிற்றாம். மேலும் இவ்வாறு வருவனகொள்க.

(கு - பு.) [அறிவஞரெய்தி - அறிவுமயங்கி. வேட்கை - தண்ணீர்த் தாகம்.] சுரும்பு - வண்டு. பொய்கை - நீர்நிலை. முகந்து - மொண்டு. பருகுதல் - குடித்தல். உடங்கு - ஒருங்கு. தரிசனம் - மதக்கிரந்தம்.

அ௬ - அக. குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடும்

இ - ள். களைபறிப்பார் பறித்து வரம்பிலிட்ட குவளைப்பூவுடனே தம்மெய்யிற் பொறியையும் வரியையுமுடைய வண்டினம் மதுமயக்கத்தாற்

* "கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழன நாடும்" என்றார் சிந்தாமணியிலும்; முத்தியிலம்பகம், ௯௦௪.



போகவறியாது உள்ளொடுங்கிக்கிடப்பனவற்றை வழிவரும்வருத்தத்தாலே நீர் அறிவுமயங்கி வறும்பூவெனக்கருதி அவற்றின்மேல் அடியிடவுங் கூடுமென்றாரென்க.

இதனாற்சொல்லியது உயிர்க்கொலைபுகாமற் பரிகரிக்கவென்பதாம்.

(கு - பு.) [குறுதல்-பறித்தல்.] பொறி - புள்ளி. வரி-கோடு; இசைப்பாட்டுமாம்.

௯௦ - ௯௩. எறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா

இ - ள். எறியுநீரையுடைய பெருவாய்க்காலினது அடைகரைவழியே போகக்கடவேமெனபேமாயின், அவ்வடைகரைநீரிலுள்ளனவாகிய பொறி வரிகளினழகையுடைய நண்டும் நத்தையும் உள்ளவழியறிந்து பாதுகாவாது முன்புநடக்கு முறைமையான் அடியிட்டுநடக்குநடையின் அவை தாம் உறக்கடவநோயை நம்மாலுறுமாயின் அதனால் நமக்குவருங் கொலைப்பாவம் நம்மால் தாங்கவுமொண்ணாது.

எறிநீர் - வாய்த்தலையினின்று குதித்துவரும் வாய்க்காநீர். இயக்கம்- வழி. நந்து - ஈண்டு நத்தை. ஊழ் - முறைமை. ஒதுக்கம் - நடை. நோ யென்றார்; கொலையென்று வாக்காற்கூறவுமாகாமையின். இக்கொலைப்பாவம் ஒன்றானும் கழுவப்படாது; அதுவேயுமன்றி மறுமைக்கண் நரகத்திலுறுந்துன்பமும் நம்மாற்றாங்கலாமளவிற்றன்றென்பதனால், உம்மை எச்சவும்மையாயிற்று. அடைகரை - கடற்கரையென்பாருமுளர்,

(கு - பு.) நந்து - இங்கே சங்கன்று. "கோறல், பிறவினை யெல்லாந் தரும்" என்றார் திருவள்ளுவனாரும்.

கசு - கஎ. வயலுஞ் சோலையு மல்லதி யாங்கணு
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோளொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெண

சோலையுமெனவே ஓருசார் வுபற்றித் தோட்டமுமடங்கிற்று. வயலும் சோலையுமென்பனவற்றைக் கூறியமுறையானே எதிர்நிரனிறையாகக்கொள்ளுவாருமுளர்.

இ - ள். இங்குக்கூறியவயலும் அங்குக்கூறியசோலையுமல்லது வேறு படக்கிடக்குநெறி மேல் நாஞ்செல்லுகின்றவிடத்திற்கில்லையாதலான், நெறித்த குஞ்சியையுடையாய், நீ நின்னைவிரும்பிய மனைவியோடே அவ்வவ்விடங்களைக் குறிப்பாலறிந்து அவை அபசாரங்களுறாமற் பாதுகாப்பாயாகவென்றாரென்க.

வெய்யோ[redacted]க்குக் குறுகாமலெனினுமமையும்.



(எக) காட்டினுங்காட்டும்; (எஉ)முட்டினுமுட்டும்; (எரு) பரற்புகையுறுக்கும்; (அக) கலங்கலுமுண்டு; (அரு) கொள்ளவுங்கூடும்; (அஅ) இடுதலுங் கூடும்; (கஉ) தாங்கவுமொண்ணா; ஆகலாற் (கஎ) குறியறிந்து அவையவை குறுகாதோம்பென்றாரென்க.

இங்ஙனம் மென்மைத்தன்மைகூறுவார், வருணனைகளையும் உடன் கூறினாரென்க. இத்தனையும் கவுந்தியடிகள் தமது பள்ளியில் இருந்து கூறினாரெனவுணர்க. வடலுமெனவே வாய்க்காலுமடங்கிற்று.

(கு - பு.) [ஓம்புகவெனச்சொல்லி.] குஞ்சி - தலைமயிர். வெய்யோள் என்றவிடத்து வெய் என்றுவிகாரப்பட்ட வெம்மையென்னும் உரிச்சொல்லுக்கு விருப்பமென்று பொருளாம்; "வெம்மைவேண்டல்" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

கஅ - கஉக. தோமறு கடிஞையுஞ் சுவன்மே லறுவையுங்
காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு

மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்

இ - ள். கவுந்தியடிகள் கடிஞைமுதலியவற்றைக்கொண்டு பஞ்சமந்திரமே நமக்கு வழித்துணையாகவெனச்சொல்லிச்செல்ல, அவரோடு பழித்தலரிய ஒழுக்கத்தோடு வழிச்செலவைப்புரிந்தவரென்க.

தோம் அறு - குற்றமற்ற. கடிஞை - ஐயக்கடிஞை. சுவல்மேல் அறுவை - தோளிலிடுமுறி. மொழிப்பொருட்டெய்வம் - பொருண்மொழியாகியதெய்வம். ஆவது * பஞ்சமந்திரம்; அ ஸி அ உ ஸா. இனிக் கொண்டென்பதனைக் கொள்ளவெனத்திரித்து அடிகளிதைச்செய்ய இவர்கள் துணையாகவென்றாரெனினுமமையும்.

(கு - பு.) கடிஞை - பிக்ஷாபாத்திரம்; இரப்போர்கலம். [பொருண்மொழி - உபதேசம்.] பீலி - மயிற்றோகை. ஆகென - வியங்கோள்விகாரம். கரு - ககக. கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்

விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடு
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே யல்ல
தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேற்றமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லா

இ - ள். கிரகங்களிற் சனிக்கிரகம் இடபம் சிங்கம் மீனமென்னுமி வற்றிேனாடு மாறுபடினும் ஆகாயத்தே தூமக்கோள் எழினும், விரிந்த கதி

---

* இந்தப் பஞ்சமந்திரத்தைப் பஞ்சநமஸ்காரமென்பர் ஜைனர்.

ஓசை, ஏற்றத்துடனே உலாவும் அகன்றபன்றிப்பத்தரின் ஓசை, மெத்தென்ற கட்டைக்களையுடைய வலிய பூட்டைப்பொறியின் ஓசை என்பது நச்சினார்க்கினியருரை. பிறர் என்றது, பத்துப்பாட்டினுள் மதுரைக்காஞ்சியின் நூலாசிரியராகிய மாங்குடி மருதனாரை. [நாரம் - சந்தனம் அகில் முதலாயின. கபவாய் - புகார்.]

கக0 - ககங. கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்

பழனத் தாமரைப் பைம்பூங் கானத்து

இ - ள். அங்ஙனமொழிந்தல்செல்லாக் கழனியிற் செந்நெலும் கரும்புஞ் சூழ்ந்த இடத்தையுடைய நீர்நிலைச்செறுவினுண்டாகிய தாமரைக்காட்டிலென்க.

(கு - பு.) பைம் பூங் கானம் - பசிய அழகிய காடு. தாமரைக்காடு என்றது, தொகுதியை.

ககச - ககசு. கம்புட் கோழியுங் கனைகுரல் நாரையுஞ்

செங்கால் அன்னமும் பைங்காற் கொக்குங்

கானக் கோழியு நீர்நிறக் காக்கையு

முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்

வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்

பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்

இ - ள். கம்புட்கோழிமுதலியன வெல்லும்போரை வல்ல அரசிருவர் பொருட்டம்போலப் பலவேறுவகைப்பட்ட திறத்தையும்ஒலியையுமுடையனவாயொலிக்கும் மிக்க ஓசையுமென்க.

கூக்குரலும் பாடம். கம்புள் - சம்பங்கோழி. கானக்கோழி - கானங்கோழி; இலவண்ணமையாக்கிக் காட்டுக்கோழியெனபாருமுளர். நீர்நிற க்காக்கை - நீர்க்காக்கை. உள்ளு - உள்ளான். ஊரல் - குளுவை; நீர்மே லூர்தலினால் ஆகுபெயர். புள்ளு - கணந்துட்புள். போதா - பெருநாரை; மரக்காரையை; புதா - விகாரம். வெல்போரும், முனையிடமும் - வினைத்தொகை. குழூஉக்குரல் - பலவாயொன்றான ஓசை.

(கு - பு.) கம்புட்கோழி - கம்புளாகிய கோழி என
இருபெயரொட்
டுப் பண்புத்தொகை; முன்னது சிறப்புப்பெயரும், பின்னது
பொதுப்பெயரு
மாம். கனைகுரல்நாரை -ஒலிக்கின்ற குரலையுடையநாரை. செங்கால் -
சிவ
ந்தகால். பைங்கால் - பசியகால். உள்ளான் - ஓர் குருவி. ஊரல் -
தொ
ழிலாகுபெயர். [கம்புட்கோழி - ஒரு சாதி.]

கஉ0 - கஉ௪. உழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய
சுழாமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு
கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரிய

இ - ள். உழவராலுழப்படாத குழியிற் சேற்றினுட்புக்கழுந்திய
கழு
வாதமயிரையுடைய உடம்பையும் சிவந்தகண்ணையுமுடைய எருமை
தன்
இனவையுடையமுதுகை உரிஞுசுதலாலே புரிநெகிழ்ந்து
அற்றுச்சரிதலுற்ற
அழிவற்ற புரிக்கூட்டினின்ற வளவிய பலவருக்கத்து
நெல்லுக்கவரித்
தொங்கல்போல விளைந்து கிடக்கின்றசெந்நெற் கதிர்த்தலையிடத்தே
சொரி
யவென்க.

தொளி - சேறு.

(கு - பு.) [உழா நுண்டொளி - தானேபட்ட சேறு.
கொழும்பல்லுணவு - பலவர்க்கத்துணவு; அவரை துவரை உள்ளிட்டன.]

கஉரு - கஉசு கருங்கை வினைஞருங் களமருங் கூடி
யொருங்குநின் றார்க்கு மொலியே யன்றியும்

இ - ள். அங்ஙனம் நெற்சொரிதலாலே வினைஞரும்

களமருங்கூடி லுன்றுபட நின்றொலிக்கும் ஒலியும், அதுவேயன்றியுலமைக.

கருங்கை - வலியகை. வினைஞர் - பறையர், பள்ளர் முதலாயினோர். களமர் - உழவர் கிழ்க்குடிமக்கள். கருங்கை இருவர்க்கும்பொது.

(கு - பு.) [களமர்-உழுகுடிவேளாளர்.] வினைஞர் - தொழில்செய்பவர். கூஉ - ககூ. கடிமலர் களைந்து முடிநா றழுந்தித்

தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறுடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியும்

இ - ள். காலையின் முடித்த பூக்களைந்து முடித்தமுடியிலே முடியினறை நறுக்கிச் சூடிக்கொண்டு வளைந்தவளையையுடைய தோளும் முலையாக முந்தோய்ந்து சேறுடுகோலத்தோடு அழகுபெறத்தோன்றிச் சிவந்த கயல் போலும் பெரியகண்ணையும் சிறியமொழியையுமுடைய கடைசியர் கடுக மயக்கும் கள்ளை உண்டுதொலைத்ததனாலுண்டான பண் திறத்திற்சேர்ந்து பழகிப்போதாத பாட்டுமென்க.



என்றது மதுமயக்கத்தாற் பஞ்சலித்து மயங்கப் பாடினரென்றபடி. இனிக் கடிமலர்களைந்து முடிநாறழுந்தியென்பதற்குப் போகாப்புல்லாகிய கழுநீர்முதலைப் பறித்து மறித்து அதனமீதே முடியினாற்றைப் பகுத்துநட்டெனினுமமையும். தோளும் ஆகமும் தோய்ந்துசேறுடுதல் - களித்து ஒருவர்மேல்ஒருவர் சேற்றை இறைத்துக்கொள்ளுதல். சின்மொழி - இழிந் தமொழி; சிலவானமொழியுமாம். விருந்திற்பாணி - தம்மிசையிற் புதுமை புண்டாகப்பாடும் பாட்டெனினுமமையும். இதனைப் பெருமூளையென்பாருமுளர்.

(கு - பு.) கடைசியர் - மருதநிலத்து உழவர் மகளிர் ; இது கடையர் என்பதன் பெண்பன்மை. விருந்து - புதுமை; பண்புணர்த்தும்பெயர். கூஉ - ககூ. கொழுங்கொடி யறுகையுங்

குவளையுங் கலந்து

விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
வேரொடு நின்றோ ரேர்மங் கலமும்

இ - ள். செந்நெற்கதிரோடே அறுகையும் குவளையையும் கலந்துதொடுத்தமாலையை மேழியிலேசூட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப் போலப் போற்றுவார் தொழப் பொனனேர்பூட்டிநின்றோர் ஏரைப்பாடும் ஏர்மங்கலப்பாட்டுமென்க.

சூட்டித் தொழ நின்றோர் ஏர்மங்கலமுமென்க.

(கு - பு.) [குட்டக்கலப்பையிலே சூட்டியென்றுமாம்.] மேழி - ஏர்க்கால்; கலப்பையின் ஒருறுப்பு. போற்றுவார்தொழ - தம்மைத்துதிப்பவர் வணங்க.

கங௯- கஙஎ. அரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
பெருஞ்செந் நெல்லின் முகவைப் பாட்டும்

இ - ள். நெல்லையரிந்து போரிட்டார் சூட்டைக் கடாவிடுதலாலுண் டான முகவைப்பாட்டும்,

ஆவது பொலிபாடுதல். முகக்கக் கொடுத்தலின் முகவையாயிற்று.

(கு - பு.) [அரி - அரிந்திடுசூடு. முகவைபாடுவார் - பொலிபாடுவார்; நெல்லுமுகந்து கொடுக்கப்படுதலாலே; "புகர்முக முகவை"போல.] சூடு- நெல்முதலியவற்றின் அரிக்குவியல்.

கங௯- கஙஅ. தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்

இது களவழிவாழ்த்து; என்னை? * "தண்பணை வயலுழவனைத், தெண் கிணைவன் றிருந்துபுகழ் கிளந்தன்று." வரலாறு: "பகடுவாழ் கென்று பனிவயலு ளாமை, யகடுபோ லங்கட் டடாரித் - திகடுடையாக், குன்றுபோற் ——————————

*புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், கஉ. ௬௦

சிலப்பதிகாரம்.

போர்விற் குரிசில் வளம்பாட, வின்றுபோ மெங்கட் கிடர்"

எனவரும்.

கிணை - தடாரி; புட்பறையென்பதுங் கொள்க.

இ - ள். தெளிந்த ஓசையையுடைய கிணைப்பொருநர் செருக்குதலோ

டெடுத்த மார்ச்சனையையுடைய திரண்டமுழவினது
கேட்டோர்மகிழும்

இசையினதொலியும்,

(கு - பு.) கிணை - மருதநிலத்துப்பறை; ஒருவகைவாச்சியம். பொருநா - கூத்தர்.

கசo - கசக. பேரியாற் றடைகரை நீரிற் கேட்டாங்
காரவ நெஞ்சமோ டவலங் கொள்ளார்

இ - ள். பெரிய யாற்றடைகரையிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு நெஞ்சம்விரும்புதலாலே வழிநடத்தலிலுண்டான வருத்தத்தை நெஞ்சிற் கொள்ளாராயென்க.

(கசக) பரந்தவோதையும் (கஉக) ஆர்க்குமொலியும் (கஙக)விருந்திற பாணியும் (கஙரு) ஏர்மங்கலமும் (கஙஎ) முகவைப்பாட்டும் (கஙகூ) மகிழிசையோதையுமென்று இவற்றைப் (கசo) பேரியாற்றடைகரைக்கண்ணே நீர்மைபெறக்கேட்டலாலுண்டான (கசக) விருப்பத்தாலே நெஞ்சில் அவலங்கொள்ளாராயென்க.

(கு - பு.) [நீரில் - நீர்மையுடனே. உருவக்கேட்டுப்போதுகை.]

கசஉ-கசஎ. உழைப்புலிக் கொடித்தே ருரவோன் கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழுறிக முட்டின்
மறையோ ராக்கிய வாவுதி நறும்புகை
யிறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும

இ - ள். புலியைத் தன்னிடத்தேயுடைய கொடியையுயர்த்த தேரையுடைய உரவோனாகிய கரிகாலனது கொற்றத்துடனே மழைக்கும் கருப்பத்தைத் தோற்றுவிக்கும் அழலை விளக்குகின்ற சாலையிலுண்டான மறை

யோராலாக்கப்பட்ட தேவருணவிலாகி இறப்புயர்ந்த மாடமாகிய

அகங்களெங்கும் போர்த்தலாலே மேகஞ்சூழ்ந்த மலைபோல மாட்சிமைப்படத் தோன்றும் மங்கலமறையோரிருப்பிடங்களும், அவையன்றியும்,

(கு - பு.) [மழைக்குக்கருப்பமாவது - தூமம். அட்டில் - ஓமசாலை. கொற்றத்துடனே மழைக்கருவையுந்தோற்றுவித்து அவ்வளவிலே விராங் இயசாலையென்க. வானவருணு - சோற்றுவி; அவியிடுகிற ஆவி. இறை - இருப்பு.] மறையோர்-அந்தணர். இருக்கை - தொழிலாகுபெயர். கசுஅ-கநுரு. பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ

இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடு பரந்து

## கo.—நாடுகாண்காதை. 

மங்குல் வானத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்றா லொருநாள்

இ - ள். இரப்பவர் சுற்றத்தையும் புரப்பவர்கொற்றத்தையும் தம்
உழவினிடத்தே விளைப்போருடைய பழையவலிபொருந்திய
ஊர்களுமாகிய
இவ்விருவகையூர்களையும் இடையிட்ட நாடெல்லாங்கண்டு
நடக்குநாட்
காதமென்னுமெல்லைபல்லது நடந்துதொலைக்கமாட்டாராய்ப்
பலநாள்தங்கி
நடக்கின்றநாளிலே ஒருநாளென்க.

ஆலைப்பொங்கி ஆலையிற்பாகுகாய்கின்ற புகைபரந்து
பரக்கப்பட்டு இருட்சியையுடைய மேகந்தவழ்ந்த
மலைபோலத்தோன்றும் பழவிறலூர் களுமென்க.

(கசுஉ) கொற்றத்தையும் (கசுங) கருவையும் (கசுக) சுற்றத்தையும்கொற்றத்தையும் (கசுடு) அழகினும் (கருo) உழவினும் விளைப்போரது (கசுஎ) இருக்கையும் (கருo) ஊர்களுமென்க.

* காவிரிநீர்கங்கைகரோதலாற் கங்கைப்புதல்வரைக் காவிரிப்புதல்வரென்றார்; அன்றியும்

† "மகவாய்வளர்க்குந்தாயாகி" என்பதனாலுங்கொள்க.

தோன்றுமிருக்கையும் தோன்றுமூர்களுமென இயையும். அவ்வூர்களையிடை யிட்டநாடென்க. உடன்கண்டென்றார், இந்நாட்டுச்சிறப்பெல்லாம் கண்டு தொலைத்துக் கழிதலருமையின். புதல்வராகி உழவிடை விளைப்போரென்க."

(கு - பு.) [காவிரிப்புதல்வர் - வேளாளர். (கருo) விளைப்போரான (கசுஅ) புதல்வர் (கருo) பழவிறலூர்களும். புரப்போர் - காக்குமரசர். பொங்கழி - தூற்றுப்பொலி. பரந்து-பரக்க. மங்குல்-இருட்சி. (கசுசு) மறையோரிருக்கையும் (கருo) பழவிறலூர்களும் (கருஉ) மலையிற்றோன்றும் (கருங) நாடென்க. (கoக) வழிப்படர் புரிந்தோர் (கருரு) செல்லுநாளுள் ஒரு நாளென்க.] பொலி - நெற்குவை. மகவாய்வளர்க்குந்தாயாகி என்ப...து-தனது நாட்டிலுள்ளவர் தனது புத்திரரையொப்ப அவர்களை வளர்க்குந் தாயாகி இருப்பது காவேரி என்றுபொருள்.

கருசு-கசுங. ஆற்றுவீ யரங்கத்து வீற்றுவே றுகிக்
குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா றொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்
பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்

---

* 'கங்கையாருழைச்சென்று காவிரியாளைவாங்கி' என்று கூறினர் நச்சினார்க்கினியரும்; இதனைத் தொல்காப்பியப் பாயிரவுரையிற் காண்க.

† கானல்வரி, உஎ.

பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்ற

இ - ள். ஆற்றைமறைக்கும் அரங்கத்தில் வேறிடத்தில்லாததன்மைத்தாய் வளைந்த மூங்கில்முள்ளால் வளைக்கப்பட்ட வேலியையுடைய மரம் பயின்ற செறிந்த சோலையில் தேவருறைதற்கொத்த பூப்பொருந்தியதொரு பக்கத்தே பட்டினப்பாக்கத்து * வான்பெருமன்றத்துப் பிண்டிநீழற்கண்ணே உலகநோன்பிகளிடப்பட்ட சிலாதலத்தின்மேலிருந்தருளிப் பெருமகனாற்செய்யப்பட்ட அதிசயங்கள்மூன்றுந் தப்பாத ஆகமநூலின் உண்மைத் தன்மையையுடைய தருமவொழுக்கத்தை யாவருங்கேட்கும்படி அருளிச் செய்யும் † சாரணர் அப்பட்டினப்பாக்கத்தைவிட்டு நீங்கிவந்து தோன்றவென்க.

அதிசயமூன்றாவன : சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீகாதிசய மென்பன.

வேறுகி உடுத்த ஒருசிறைச் சாரணர்தோன்றவென்க.

(கு - பு.) [ஆற்றுவீயரங்கம் - ஆற்றைமறைக்கும் அரங்கம் ; ஆவது - குறை ; அது சீரங்கம். ஆற்றவியென்பாருமுளர். அடுக்கம் - மரச்செறிவு; அரங்கத்திற்கு அடுத்த இடம். முன்பு சொன்ன சாரணர்தோன்ற. ஐயர்முன்சொன்ன உலகநோன்பிகள். ஐயர்பட்டினப்பாக்கத்திலிட்ட சிலாதலத்து இருந்து தருமஞ்சாற்றுதல் சாரணர்க்கு அடையாக்கி, அவர் இங்கே தோன்றவென்க.] அரங்கம் - ரங்கம் ; யாற்றிடைக்குறை. கசுசு-கசுக. பண்டைத் தொல்வினை பாறுக வென்றே

கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினு
மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்

இ - ள். முன்செய்த பழவினையெல்லாம் கெட்டோடுவதாகவென் றுட்கொண்டு அவர்வந்தமையைக்

கண்டறிந்த கவுந்தியடிகளுடனே சென்று அவரடியிலே தலையுறவீழ்ந்தார்; அங்ஙனம் விழுந்தவர் இங்குவந்தது தனது விளங்கிய கோட்பாட்டையுடைய ‡ அவதிஞானத்தால் தெரிந்தவ

---

* வான்பெருமன்றமென்பது முதலாக இங்கே தந்துரைத்தவற்றை, இக்காதை உ0-ம் அடிமுதலியவற்றிற் காண்க.

† சாரணர் - சமணமுனிவர். அவர், தலசாரணர் சலசாரணர் பலசாரணர் புட்பசாரணர் தந்திசாரணர் சதுரங்குலசாரணர் சங்கசாரணர் ஆகா சசாரணரென எண்வகையர்.
இவ்விருவராகச்சென்று தருமோபதேசஞ் செய்தல் அவர்கட்கு இயல்பென்பர்.

‡ அவதிஞானம் - தன்னுடைய அதீதகதமான பரிஞ்ஞானம்; அஃதாவது முற்பிறப்பையறியுமறிவு.

## க0.—நாடுகாண்காதை. ருரு

ருயினும் ஆர்வமும் செற்றமும் தன்னை விட்டுப்போம்படி நீக்கிய * வீரனுக
லாலே இவர்க்கு வருந்தினபத்திற்குத் தான் வருந்தானுகியென்க.
கண்டறிகவுந்தியென்பதனுலும் † காலவுணர்ச்சியின்மையுணர்க.
ஒடு-
ஒருவினையொடு.
(கு - பு.) [சிந்தை விளக்கு - அவதிஞானம்; என்றது, திரிகாலஞா
னத்தை ] ஆர்வம் - அன்பு. செற்றம - பகைமை. விழுமம்-துன்பம்; உரிச்
சொல்; "விழுமஞ்சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்றார் ஆசிரியர்தொ
ல்காப்பியனார்.
கஎ0 - கஎக. கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணு

'யொழிகென வொழியா தூட்டும வல்வினை

இ - ள். மிக்க பெரிய தவச்சிறப்பையுடைய கவுந்தி, யாவரானும் ஒழிக்க வொழியாததாய் நுகர்விக்க வந்தடைகின்ற தீவினையைக் காணுமென்றவாறு.

காணுப - பாராய். ஒழிகெனவொழியாதெனபதற்கு, * ‡ 'உரிய நன்றாய் கொழிக' எனவும் ஒழியாது ஊட்டுந் தீவினையையெனினுமமையும். கஎஉ-கஎக. இட்ட வித்து னெதிர்ந்தவக் தெய்தி

யொட் டுங் காலை யொழிக்கவு மொண்ணு

இ - ள். விளைநிலத்திட்ட வித்துப்போலப் பயனெதிர்ந்து கண்கூடாக நல்வினைவந்து நுகர்விக்குங்காலத்தும் ஒழிக்கவொண்ணு; அதுபோல இதுவும ஒழிக்கவொழியாதென்றவாறு.

§ "உறற்பால........பாரு மில்" என்றாராகலின்.

தீவினைதன்னையே கூறினுமமையும். உம்மை - எச்சவும்மை.

(கு - பு.) "உறற்பால" என்னும் நாலடியார்

பெற்றோருக்கு-ஊழ்வினையால நேரிடத்தக்க துன்பங்கள் ஆற்றல் மிகுந்தமுனிவர்களுக்கும் விலக்கக்கூடாதனவாம், படத்தக்க தன்மையையுடைய அவ்வின்பங்களும்

அப்படிப்பட்டனவாகும், எவைபோலவெனின், மழைபெய்யாதாயின் அதனை வருவிக்கவல்லவருமில்லை, அம் மழை மிகுதியாகப்பெய்தால் அதனைக்குறை

* வந்தசாரணர் நுவருள், உபதேசிப்போர் மூத்தோரேயாதலின், வீரவனை ஒருமையாற்கூறினார்.

† 'காலவுணர்ச்சியின்மையுணர்க' என்றது, [நிரு - ம் அடி] 'உரிய நன்றாய் கொழிகென வொழிமீர்' என்பதன உரைமிறகூறியதை வற்புறுத்தற்கு.

‡ நாம்காமைகாதை, நிரு.

§ நாலடியார், பழவினை, ச : "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா, பெறற்பா லனையவு மன்னவா மாரி, வறப்பிற் றருவாருமில்லை யதனைச், சிறப்பிற் றணிப்பாரு மில்."

யச்செய்பவர்களுமில்லை என்பதுபொருள் ; எல்லாம் பழவினையின்படியே நடக்குமென்பது கருத்து.

களசா- களரு. கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்கள்

இ - ள். கடியகாற்றையுடைய நெடிய வெளியில் இடப்பட்ட விளக்கென்னும்படி மாயினல்லதுகூடிஉடனில்லா, உடம்பினின்ற உயிர்களுமென் றுரென்க.

நல்வினை தீவினைப்பயனாகிய இன்பமுந் துன்பமும் வருங்கால் யாவராலும் ஒழிக்கவொண்ணாதென்பதூஉம், யாக்கைநிலையாமையும் இவர்தம்பால் உறுவது கண்டு கவுந்தியடிகட்குச் சாரணர் கூறினாரெனவுணர்க. விளக்கு உவமித்தார் ; நினைவறஅழிவதற்கும், புக்குழிப் புலப்படாமைக்கும். களசு - கககக.

அறிவ னறவோன்.........பொதியறை யோரென

களசு. அறிவன் — இ - ள். எல்லாப்பொருளையுமறியும் அறிவை யுடையோன்,

களசு. அறவோன்—இ - ள். அறஞ்செய்தலையே தொழிலாகவுடையோன்,

களசு. அறிவுவரம் பிகந்தோன்—இ - ள். யாவருமறியப்படும் அறிவெல்லையைக் கடந்தோன்.

களஎ. செறிவன்—இ - ள். எல்லாவுயிர்கட்கும் இதஞயுள்ளவன் ; சம்மியாதவனென்றுமாம்.

களஎ. சினேந்திரன்—இ - ள். எண்வகைக் கன்மங்களையும் சயித்தவன்.

அவையாவன : * ஞானவாணீயம், தரிசனவாணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம். அந்தராயமெனவிவை.

களஎ. சித்தன்—இ - ள். கிருதகிருத்தியன் = செய்யப்படுவனவற்றைச் செய்துமுடித்தவன்,

கருமங்களைக் கழுவினவனுமெனபர்.

கஎஎ. பகவன்—இ - ள். † கேவலஞானி.

கஎஅ. தரும முதல்வன்—இ - ள். தருமங்களுக்கு அடியாயுள்ளவன,

கஎஅ. தலைவன்—இ - ள். எல்லாத்தேவர்க்கும் தலைவனாக எண்ணப் பட்டவன்,

---

* ஞானாவரணீயமுதலியவெட்டும் காதி அகாதியென இருவகைப்பட்டு, கசஅ - ஆக விரியு மென்பர்.

† கேவலஞானம் - ஐந்து ஞானத்துள்ளுஞ்சிறந்தது. ஐந்து ஞானங் களாவன : க. மதிஞானம்—சுவபாவபுத்தி ; உ. சுருதஞானம்—நூலுணர்ச்சி ; ௩. அவதிஞானம்—தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவு ; ௪. மனப் பரியயஞானம்—தன்னுடைய முற்பிறப்பையும் பிறருடைய முற்பிறப்பையும அறியுமறிவு ; ரு. கேவலஞானம்—திரிகாலவுணர்ச்சி.



கஎஅ. தருமன்—இ - ள். தருமந்தானாயுள்ளவன்,

கஎகூ. பொருளன்—இ - ள். ஆகமத்தின் பொருளாயுள்ளவன் ; உண்மைப்பொருளாயுள்ளவனெனவுமாம்.

கஎகூ. புனிதன்—இ - ள். சுத்தன் ; புதியவனுமென்பர்.

கஎகூ. புராணன்—இ - ள். பழையவன்,

கஎகூ. புலவன்—இ - ள். எல்லார்க்கும் அறிவாயுள்ளவன்,

கஅ0. சினவரன்—இ - ள். சினத்தைக் கீழ்ப்படுத்தியவன்,

கஅ0. தேவன்—இ - ள். தேவர்களுக்கு ஆதியாகிய தேவன்,

கஅ0. சிவகதி நாயகன்—இ - ள். வீட்டுலகிற்கு நாயகனாயுள்ளவன்,

கஅக. பரமன்—இ - ள். மேலானவன்,

கஅக. குணவதன்—இ - ள். குணத்தையுடையவன் ; வதம்-* விரத
மூமாம்.

கஅக. பரத்தி லொளியோன்—இ - ள். மேலாய உலகிற்கு விளக்கா
யுள்ளவன்,

கஅஉ. தத்துவன்—இ - ள். தத்துவங்களையுடையோன்,

கஅஉ. சாதுவன்—இ - ள். ஒடுங்கினவன்,

கஅஉ. சாரணன்—இ - ள். ஆகாசவாசி,

கஅஉ. காரணன்— இ - ள். எல்லாவற்றிற்கும் காரணமாயுள்ள
வன்=காரணபூதன்.

கஅங. சித்தன்—இ - ள். எண்வகைச் சித்திகளையுமுண்டா
க்கினவன்,

(கு - பு.) எண்வகைச்சித்திகள் - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என இவை.

கஅங. பெரியவன்—இ - ள். எல்லாவற்றுலும் பெரியவன்,

கஅங. செம்மல்—இ - ள். நாயகமூர்த்தி,

கஅங. திகழொளி—இ - ள். விளங்கும் ஒளியாயுள்ளவன்,

கஅச. இறைவன்—இ - ள். எப்பொருளிலும் † தங்குகின்றவன்,

கஅச. குரவன்—இ - ள். குருமூர்த்தியாயுள்ளவன்,

கஅச. இயல்குணன்—இ - ள். இயல்பையே குணமாகவுடையவன்,

கஅச. எங்கோன்—இ - ள். எம்முடையசுவாமி,

கஅரு. குறைவில் புகழோன்—இ - ள். நிறைந்த புகழையுடையோன்,

கஅரு. குணப்பெருங் கோமான்—இ - ள். குணங்களைச் சம்பத்தாகவுடையவன்,

---

---

* விரதம் - அனுவிரதம், குணவிரதம
சிக்ஷாவிரதமெனமூன்றுவகைப் படும் ; அவற்றுள், குணவிரதம் - இக்குவிரதம், தேசவிரதம், அநர்த்ததண்டவிரதமென மூன்றுவகைப்படும்.

† இறுத்தல் - தங்குதல்.

ரு௬ — சிலப்பதிகாரம்.

௧௭௬. சங்கரன்—இ - ள். சுகத்தைப்பண்ணுகிறவன். ௧௭௬. ஈசன்—இ - ள். ஐசுவரியவான்,
௧௭௬. சயம்பு—இ - ள். தானே தோன்றினவன், ௧௭௬. சதுமுகன்—இ - ள். நாள்குமுகன்,

௧௭௭. அங்கம் பயந்தோன்—இ - ள். * அங்காகமத்தை யுண்டாக்கினவன்.

௧௭௭. அருகன்—இ - ள். பூச்சியன்,

௧௭௭. அருண்முனி—இ - ள். சிவபரமூர்த்தி,

௧௭௮. பண்ணவன்—இ - ள், கடவுள்,

௧௭௮. எண்குணன்—இ - ள். எட்டுக்குணங்களையுடையோன், எண்குணமாவன ; அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்ததரிசனம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், நிர்நாசமெனவிவை.

(கு - பு.) [எண்குணமென்றது அநந்த ஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், அநந்தநாமம், நிட்காமம், நிராயுஷ்யம், சத்பாவ:ு என இவை.]

௧௭௮. பாத்தில் பழம்பொருள்—இ - ள். பகுத்தற்கரிய புராணப்பொருளாயுள்ளவன் ; ஒட்டமற்ற பொன்னையொப்பானென்றுமாம்.

௧௭௯. விண்ணவன்—இ - ள். சுவர்க்கவாசி,

௧௭௯. வேத முதல்வன்—இ - ள். † ஆகமமூன்றிற்கும் முதலாயுள்ளவன்,

கஅக. விளங்கொளி—இ - ள். அஞ்ஞானவிருணீங்க

விளங்குமொளி. ககo - ககக. ஓதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரென

இ - ள். இந்நாமங்களையுடையோனாலோதப்பட்ட ஆகமமாகியவிளக் கொளியைப் பெற்றாற் போந்தேறினல்லது யாவரும் பிறவியாகிய சிறையி னின்றும் போகமாட்டாரென்றாரென்க.

பொதியறை - துவாரமில்லாத கீழறை.

---

* அங்காகமம், கஉ பகுப்புடைத்து. அவைவருமாறு :—க. ஆசாராங் கம், உ. சூத்திரகிருதாங்கம், ௩. ஸ்தானாங்கம், ௪. ஸமவாயாங்கம், ௫. வியாக்கியாப்பிரஞ்யப்த்யங்கம், ௬. ஞாத்ருகதாங்கம், எ. உபாஸகாத்திய யனாங்கம், அ. அந்தக்கிருத்தசாங்கம், ௯. அநுத்தரோபபாதிகதசாங்கம், கo. பிரச்சினவியாகரணங்கம், கக. விபாகசூத்திராங்கம், கஉ. திருஷ்டிவாதாங்கம்.

† ஆகமமூன்றாவன : அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமமென்பன.



கஙஉ - கஙங. சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்
காவுந்தி யுந்தன் கைதலை மேற்கொண்டு

இ - ள். அங்ஙனம் சாரணாருளிச்செய்த பெருமையமைந்த உண்மை மொழியைக் கேட்டுத் தவத்திற்கு முதல்வியாகிய கவுந்தியடிகளும் தமது கைகளைத் தலைமேல்வைத்துக்கொண்டு நின்று கூறுவார் :— கஙச - கஙரு. ஒருமொன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா

இ - ள். ஐம்பொறிகள் காமவெகுளிமயக்கங்களைக் கெடுத்தவனா லோதப்பட்ட ஞானபாதமாகிய திருமொழியைக்கேட்டற்குத் திறப்பினல்லது பிறிதொன்றற்குத் திறப்பனவல்லவென்றாரென்க.

அவித்தல் - அடக்குதலுமாம்.

௧௯௯ - ௧௯எ. காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்நா

இ - ள். என் நாவும் காமன்செயலை வென்றவனுடைய ஆயிரத்தெட்டு வகைப்பட்ட நாமத்தைச் சொல்லினல்லது பிறிதொன்றனைச் சொல்லா தென்றாரென்க.

௧௯அ - ௧௯௯. ஐவரை வென்றோ னடியிணை யல்லது
கைவரைக் காணினுங் காணா வென்கண்

இ - ள். எனது கண்களும் ஐவகைப்பட்ட இந்திரியங்களையும் வென்றவனுடைய அடியிணைகளைக் காணினல்லது பிறிதொருதேவரடியிணைகளைக் கையகத்தேகாணினும் காணாவென்றாரென்க.

ஐவர் - செறலின்கண் திணைமயக்கம். இனிக் கைவரைகாணினும் என்றுபாடமாயின், கைவரைகாணல் - கண்விழித்தலாச்கி, விழித்திருப்பினும் காணாவென்க.

(கு - பு.) [ஐவர்-பஞ்ச இந்திரியங்கள்.] இது, கோபம்பற்றிவந்ததிணை வழுவமைதி. அடியிணை - உபய பாதம்.

௨00 - ௨0௧. அருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தாது

இ - ள். எனது பயனற்ற உடம்பு அருளால் அறத்தைப்பூண்டோனுடைய திருமேனிப்பொருட்டுப் பூமியிற்பொருந்தினல்லது பிறிதொன்றற்குப் பொருந்தாதென்றாரென்க.

அருளறம் - உம்மைத்தொகையுமாம்.

(கு - பு.) யாக்கை பூமியிற் பொருந்துதல் - தண்டனிடுதல். ௨0௨ - ௨0௩. அருக ரறவ னறிவோற் கல்லதெ
னிருகையுங் கூடி யொருவழிக் குவியா



இ - ள், எனது இருகையும் அருகர்க்கு அறத்தைக்கூறுவோனுகிய

அறிவன்பொருட்டு என்சிரத்தின்மிசையே குவியினல்லது பிறிதொரு தேவர்பொருட்டுக் குவியாவென்றாரென்க.

அருகர் - இருடிகள்.

உ0௬ - உ0௫. மலர்மிசை நடந்த மலரடி யல்லதென்
றலைமிசை யுச்சி தானணிப் பொறாஅது

இ - ள். எனது தலையினுச்சியும் பூவின்மீதேநடந்த மலரடியாகிய அணியை அணியப் பொறுப்பினல்லது பிறிதொன்றனையும் அணியப் பொறாதென்றாரென்க.

(கு - பு.) [தலையிடத்து.] அருகக்கடவுள் தாமரைமலரை வாகனமாக்கொண்டு அதனை ஊர்ந்து சென்றன ரென்று ஜைனநூல் சொல்லும். உ0௬ - உ0௭. இறுதியி லின்பத் திறைமொழி யல்லது
மறுதர வோதியென் மனம்புடை பெயராது

இ - ள். என்மனமும் ஈறிலின்பமாகிய அநந்தசுகத்தையுடைய இறைவனருளிச்செய்த ஆகமமாகியமொழியை உருவேற ஓதிப் புடைபெயரினல் லது பிறிதொருமொழியையோதிப் புடைபெயராதென்றாரென்க.

மறுதர - மீளவும்.

உ0௮ - உக௫. என்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தர மாறாப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து

இ - ள். தம்மையைத் தலைமேற்கொண்டு நின்று, கவுந்தியடிகள் (கக௫) திறவா ; (கக௭) நவிலாது ; (கக௯) காணா ; (உ0க) பொருந் தாது ; (உ0௩) குவியா ; (உ0௫) பொறாஅது; (உ0௭) பெயராது என்றுகொண்டு அவன்புகழ்மொழிகளை ஏத்தக்கேட்டு அதற்குப் பொருந்தியசாரணர் அவ்விடத்திடப்பட்ட சிலாவட்டத்தினின்றுமெழுந்து அதற்கு ஒரு முழவுயரம் மேலாநின்று

பிறப்பைத்தரும்பாசம் கவுந்திக்குக் கெடுவதாகவென்றுகூறி அந்தரவழியாக விரைந்துசெல்லுகின்றவரைநோக்கித் தொழுது பாசங்கள் அறுகவென்று பணிந்தனராய்ப்போந்தென்க.

(கு - பு.) [உயர்மிசை - சிலாவட்டம். ஓங்கி - எழுந்திருந்து. பந்தம்- ஸம்ஸாரம்.]

உகச - உகஅ. காரணி பூம்பொழிற் காவிரிப் பேரியாற்று
நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியும்



தீதுதீர் நியமத் தென்கரை யெய்திப்
போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழி லிருந்துழி

இ - ள். முகிலையணிந்த அழகியபொழிலையுடைய காவிரியாகிய பெரிய யாற்றிற்கு மாதரும் கணவனும் கவுந்தியடிகளும் பள்ளியோடத்தேறிப் போய்த் தென்கரையைச்சென்றடைந்து மலர்கள்சூழ்ந்துகிடக்கின்றதோர் பொலிவினையுடைய சோலையிடத்தே சென்றிருந்தபொழுதிலென்க.

(கு - பு.) [நீரணிமாடம் - பள்ளியோடம்.]

உகக - உஉo. வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் சென்றோர்

இ - ள். * இடங்கழிகாமத்தளாகிய குண்டக்கணிகையொருத்தி ஒருவனோடுங்கூடி இவர்களிருக்கின்ற மணம்பரந்ததோர் அழகிய பொழிலிடத்தே அணுகினராய்ச்சென்றவரென்க.

வம்பப்பாத்தை - புதிய பரத்தைத்தன்மையையுடையாள்; குண்ட பென்றபடி. இனி மனவெழுச்சியால் தோன்றினபடி சொல்லித்திரியும் பரத்தையென்றுமாம். வறுமொழியாளன் - பயனில்சொல்லாளன்; விடனென்றபடி.

உஉக - உஉஉ. காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ராரெனக் கேட்டீங் கறிகுவ மெனறே

இ - ள். இவ்விடத்துவந்திருக்கின்ற காமனையும் இரதியையுமொக்குமிவர்களையாரென்றுகேட்டு அறியக்கடவோமென்று சொல்லியென்க.

இனி இவ்விடத்துவந்த இவர் காமனும் தேவியுமே ; அல்லராயின், யாரெனக் கேட்டறிகுவமென்றுரைப்பினுமமையும். இப்பொருட்குப் போலி, ஒப்பில்போலி. ஈங்கிவர், ஈங்கு - இவ்விடத்து. கேட்டீங்கு, ஈங்கு - இப்பொழுது.

௨௨௩-௨௨௪. நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருட

னாற்று வழிப்பட்டோ ராரென வினவ

இ - ள். † உவாமுதலிய விரதங்களிற் பட்டினிவிட்டுண்டலால் மலிந்த உடம்பையும் நுண்ணிய தவத்தையு முடையீர், நும்மொடுகூடி வழிவந்தவிவர் யார்தானென்று வினவவென்க.

---

* இடங்கழிகாமம் - மிக்ககாமம்; "இடங்கழி காமமொ டடங்கா னாகி, யுடம்போ டென்ற னுள்ளகம் புகுந்தென், னெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி" என்றார் மணிமேகலையிலும்; ௧௮ - வது உதயகுமாரன் அம்பலம்புக்க காதை. "இடங்கழி யாளர் தொடர்பின்னு" என்று இன்னாநாற்பதிலும் கூறியிருத்தல் காண்க.

† "ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட்டு" என்றார் சிந்தாமணியிலும்; கேமசரியாரிலம்பகம், ௧௩௬.



ஆற்றுவழிப்பட்டோர் - வழியிற் கூடிவந்தோர்.

(கு - பு.) உவா - பதினைந்தாந்திதி ; அமாவாசியையும், பூர்ணிமையும். முதலிய என்றது, அஷ்டமி, சதுர்த்தசி முதலியவற்றை.

௨௨௫-௨௨௬. என், மக்கள் காணீர் மானிட யாக்கையர்

பக்க நீங்குமின் பரிபுலம் பினரென

இ - ள். அவ்விருவரும் இவ்விருவரையும் வினவுதல்கண்ட

கவுந்தியடிகள் இவர் எனமக்கள்காணும்; நீர்சொன்ன காமனும் தேவிபுமலல்; மானிடயாக்கையர்; வழிவருதலாலாகிய வருத்தத்தால் மிகவும் வருந்தினர்; அவரிடஞ்செல்லாதே விடப்போமினென்றனரென்க.

* பரி - மிகுதி; ஒருசொல்லுமாம்.

(கு - பு.) பரி - வடமொழி உபசர்க்கம்; மிகுதிப் பொருளைத்தரும் இடைச்சொல். அது, புலம்பினரெனலும் தமிழ்மொழியொடுதொக்கது; "அதிநுட்பம்" என்றாற்போல. [பரி புலம்பினர் - செலவால் வருந்தினர்.] மக்கள் என்றது, அன்புபற்றி; மரபுவழுவமைதி.

உஉஎ-உஉஅ. உடன் வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரென

இ - ள். நூல்களையுங்கற்று அதன்பயனையுமறிந்தவரே, ஒருவயிற்றுட் பிறந்தோர் கொழுநனும் மனைவியுமாய்க் கூடிவாழக்கடவதென்று நீர்கற்ற நூல்களிற் சொல்லிக்கிடப்பதுமுண்டோ? உண்டாகிற் சொல்லுமென்றாரென்க.

கற்றறிந்தீரென்றது இகழ்ச்சி. இவ்வாறே நீர் கற்றனவுமெனப்படும்.

(கு - பு.) உடன்வயிற்றோர்கள் - சகோதரர். கீழ் "எனமக்கள்" என்றதன்மேல் இவ்வாறு ஆக்ஷேபித்தார்கள்.

உஉகூ - உ௩0. தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
வெள்ளுநர் போலுமிவ ரெனபூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்ட தவந்தரு சாபங்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்
குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினு
மறியா மையென் றறியல் வேண்டுஞ்
செய்தவத் தீர்நுந் திருமுன் பிழைத்தோர்க்

(கு - பு) [பட்டதை அறியார் - மனத்தில் இவர் நினைத்ததாதலால் அறிந்திலர். பின்பு அறிந்தபடி : அவர்கள் முன்னோரியானபடியாலும், தங்களைப் பொல்லாங்கு கூறினமையாலும், அவ்விடத்து இவரல்லது வேறு சாபமிட வல்லாரில்லையாகலானும், இச்சாபம் இவராலே வந்ததென்று இவரறிந்தார் ; அறிந்து (உசO) உய்திக்காலம் உரையீரோவென்றார்.] உய்திக்காலம் - சாபநிவிர்த்திகாலம். " ஒப்பில்போலியுமப்பொருட்டாகும் " என்றவிதியால், போலுமென்பது இங்கு உரையசைப்பொருளதாய் நின்றது. உட்கோள் - மனத்திற்கருதியது.

உசக - உசரு. அறியாமையின் இழிபிறப் புற்றோ
ருறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப் பன்னிரு மதியம் படர்நோ
யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து

இ - ள். தமது முப்பொறிகளால் வரும் துன்பமென்பதனை அறிந்து கூறாமையாலே இன்று இழிபிறப்பையுற்றவிவர் உறையூர் மதிற்புறமாகிய காவற்காட்டில் திரிந்து பன்னிரண்டு மாதம் இங்ஙனந் துன்பமனுபவித்த பின்னர் முன்னைப்பிறப்பைப் பெறுவாராகவெனச் சாபவிடைசெய்தென்க.





இன்று இழிபிறப்புற்றோரென்றது நெடுங்காலம் தவஞ்செய்துபெற்ற மக்கட்பிறப்பை ஒருவார்த்தையினிழந்து இழிபிறப்புற்றாரென்றவாறு. எனவே * யாகாவாராயினும் நாகாத்தல்வேண்டுமென்பதாயிற்று. நொச்சியொருபுடையென்றது அரண்வேண்டாமை விளக்கிற்று ; † " நொச்சி வேலித் தித்த னுறந்தை" என்றதுமது. இழிபிறப்பு - விலங்கின்பிறப்பு.

முன்னையுருவம் -வம்பப்ட.த்தையும் வறுமொழியாளனுமெனவுமாம்.

(கு - பு.) முப்பொறி - திரிகரணம் ; மனமொழிமெய்கள். சாந்திர மான சம்பந்தத்தால் மதியென்றுந் திங்களென்றும் மாதத்திக்குப்பெயர். [படர்நோய் - உறழ்ச்சியாலுண்டான நோய்.] சாபவிடை - சாபநிவிர்த்தி. யாகாவாராயினும் - தம்மாற்காக்கப்படுவன வெல்லாவற்றையுங் காக்க மாட்டாராயினும். நாகாத்தல் - நாவொன்றையும் அடக்குதல்.

உசடு - உசஅ. தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனு
முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென

இ - ள். தவத்தான்மிக்க சிறப்பையுடைய கவுந்தியடிகளுந் தேவியும் கணவனும் முறம்போலுஞ்செவியையுடைய யானையைச சமரிடத்துக் கெடுத்த புறத்தேசிறையையுடைய கோழியென்னுநகரின்கண்ணே விருப்பத்தோடு புக்காரென்க.

---

* திருக்குறள், அடக்கமுடைமை, எ: "யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

† அகநானூறு,மணிமிடைபவளம் கஉக:"இரும்பிழிமகாரிவ் வழுங்கல் மூதூர்,விழவின் றாயினுந் துஞ்சா தாகு.மல்லலாவணமறுகுடன்மடியின், வல் லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்,பிணிகோ ளருஞ்சிறையன்னை துஞ்சிற், றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவ, ரிலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று, வலஞ்சுரி தோகை ஞாளி மகிழு, மரவவாய் ஞமலி மகிழாது மடியிற், பகலுறழ் நிலவுக் கான்று விசும்பி, னகல்வாய் மண்டில நின்றுவிரி யுமமே, திங்கள்கல் சேர்பு கனையிருண் மடியின், இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை, கழுதவழங் கியாமத் தழிதகக்

குழூஉம், வளைக்கட் சேவல் வாளாது மடியின், மனைச்செறி கோழி மாண்குர லியம்பு, மெல்லா மடிந்த காலை யொருநா, ளில்லா கெஞ்சத் தவர்வா ரலரே, யதனால், லரிபெய் புட்டி லார்ப் பப் பரிசிறந், தாதி போகிய பாய்பரி நன்மா, னுேச்சி வேலித் தித்த னுற நந் தைக், கயன்முதிர் புறங்காட் டன்ன,பன்முட்டின்றாற் றோழிநங் களவே" என்பது, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது ; பரணர்.



வாரணம் - கோழியூர்; ஆவது உறையூர். முற்காலத்து ஓர்கோழி யானையைப் போர்தொலைத்தலான் அந்நிலத்திற்செய்த நகர்க்குக் கோழியெ ன்பது பெயராயிற்று. அந்நகர் காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமா க ஆக்கியவதனாற் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்றென்பாரு முளர். அற்றன்று;புறஞ்சிறைவாரணமென்பது சிலேடை: புறத்தே சிறை யையுடையகோழியும், புறஞ்சேரியையுடைய உறையூரும் ; * "புறஞ்சிறைப் பொழிலும்" என்ப [illegible] [illegible]மாக [illegible]ன். புறஞ்சிறைவாரணம் - கோழியூரெனக்கொள்க.

(கு - பு.) [முழூஉம் - எழூஉ. வாரணம் - யானை. வாரணம் - கோழி ; புறத்தேசிறையையுடைய கோழி - உறையூர் ; கோழி - ஆகுபெயர். யானை யைக் கோழி மு நக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயி த்தகோழி தோன்றி [illegible] வ[illegible]புடைத்தென்று கருதி அவ்விடத்தி அதன் பெயராலே சோழன் னகர்காண்கின்றபொழுது சிறையுங்கழுத்துமாக்கிய [illegible]தனால் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று.] "புறஞ்சிறைப்பொழில்" என்பத[illegible] [illegible] - புறஞ்சேரியிடத்திலுள்ளனவாகிய சோலைகளென்று பொருள். எள - ஈற்றசை.

(உகரு) பணிந்தனர் போந்து (உகஎ) எய்தி (உகஅ) இருந்துழிச்

**(௨௨௦)** சென்றோர் (௨௨௪) விளவப் (௨௨௬)) பரிபுலம்பினரெனக் **(௨௨௮)** **கடவது** முன்னடோ கற்றறிந்தோ ரெனச் (௨௨௯) செவிபகம்புதைத்து **(௨௩௦)** **நடுங்க** (௨௩௨) முதுநரிபாலர்களைக் (௨௩௪) கட்டிபதாதலின், (௨௪௦) **உரையீரோ** வெனப் (௨௪௪) பெயறுக ஈய்ஙிவரெனச் (௨௪௫) **சாபவிடை** செய்து **(௨௪௬)** கவுந்தியும் தேவியும் கணவனுப (௨௪௮) புரிந்துபுக்கா ரென்க.

இஃது, எல்லாவடியுந் தம்முளொத்துமுடிதலின் **நிலைமண்டிலவாசிரி** யப்பா.

(கு - பு.) இஃது - "வான்கண்" என்னும் **இக்காதைச்செய்யுள்.** எல்லாவடியும் அளவொத்த நாற்சீரடியாக வருதல், **நிலைமண்டிலவாசிரி** யப்பாவினிலக்கணம். இது, ஏகாரத்தாலாயினும், **ஓகாரத்தாலாயினும்,** என வென்பதனாலாயினும் முடியுமென அறிக.

## நாடுகாண்காதை முற்றிற்று.

---

* ஊர்காண்காதை, க.